S. V. சுப்பையா பாகவதர், S. G. கிட்டப்பா,
K. B. சுந்தராம்பாள், G. S. முனுசாமி நாயுடு, V. P. ஜானகி
ஸ்ரீ பால வினோத நாடக சபையார் இவர்களால் பாடிவரும்
சொன்னதைச் சொல்லும் சுவடித்தூக்கி
சுந்தராங்கதன் சரிதை யென்னும்

# தூக்குத்தூக்கி டிராமா.

போலி புத்தகங்களைக் கண்டு ஏமாறுமல்



K. A. மதுரை முதலியார் பதிப்பித்ததாக பார்த்து வாங்கவும்.



சென்னை, முத்தியாலுபேட்டை, பாலசந்தச்சரபக்கவி.
V. A. தியாகராஜ செட்டியாரவர்களால் இயற்றப்பெற்று,
[illegible] முதலியாரவர்களால் பதிப்பிக்கப்பட்டது.
[illegible] 1932. [விலை அணா 4.

உ

ஸ்ரீ வேலுமயிலூர் துணை.

சென்னை, முத்தியாலுப்பேட்டை, பாலசந்தச்சரபக்கவி

**V. A. தியாகராஜ செட்டியாரவர்களா லியற்றிய**

சொன்னதைச் சொல்லும் சுடிவத்தூக்கி

## சுந்தராங்கதன் சரிதை யென்னும்

# தூக்குத்தூக்கி டிராமா.

இரண்டுபோகமும் அடங்கியது.





இஃது

**K. A. மதுரை முதலியாரவர்களால்**

பிரசுரிக்கப்பெற்றது.

ரிஜிஸ்டர் செய்தது.] 1932. [விலை அணா 4.

இந்நூலாசிரியர்.



சென்னை, [illegible]
[illegible]
V.A. தியாகராஜசெட்டியார்.

ஸ்ரீ வேலுமயிலுந் துணை.

சொன்னதைச் சொல்லும் சுவடித்தூக்கி

# சுந்தராங்கதன் சரிதை யென்னும்

# தூக்குத்தூக்கி டிராமா.

### விநாயகர் துதி வெண்பா.

தந்தைதா யார்மனைவி தங்கைதனை யும்வெறுத்த
சுந்தராங் கதன்சொன்ன தைச்சொல்லும்—விந்தையுள
தூக்குத்தூக் கிடிராமா சொல்லுதற்கு வேழமுகா
வாக்கில் குடிபுகவே வா.

### விநாயகர் துதி.

அரிஹரிமாதவ கருணாகரனே என்றமெட்டு.

வாரணமாமுக வைங்கரநாதா
வல்லபையாள்தனை தழுவும் விநோதா (வா)

வாராய் சீராய் வந்தெனைக்காராய்
வாமனன் மருகனே வருளதைத்தாராய்
வடிதுரூதேனே கண் பாராய் (வா)

அய்யா மெய்யா அங்குசக் கையா
அண்டினே னுந்தனை யாதரியையா
ஆராதரப் பொருளே துய்யா (வா)

பூமா சீமா புவிபுகழ் நேமா
புவனேஸ்வரியா வீன்ற புதல்வனே கோமா
புரியக்கருணை கோப மாமா (வா)

ஆதிஜோதி அருள்மிகுங் கியாதி
அன்பன் தியாகராஜன் அருந்தமிழோதி
அடிபணிந்தேன் ஆட்கொள்ளல் நீதி (வா)

சீன்:—1] [இடம்:—தர்பார்.

சபையில் மந்திரி முதலானோர் அமர்ந்திருக்கின்றனர். சுந்தராங்கதனின் தந்தையாகிய மகாராஜா வருகிறார்.

ராஜன் தரு.

திரிலோகமும் புகழும் சுந்திரன் என்றமெட்டு.

மாவீர புஜபல மன்னன்யான்
மாக்ஷிசேர் சபையில் வந்தேன் (மா)

ஆவிபோனபோதும் யான்நீதி தவரிடேன்
அண்டிவந்தபேரை அணுவேனும் கைவிடேன் (மா)

காருண்யமே வைத்து குடிகளை ரக்ஷிப்பேன்
காருலகில் மிகு தீரம் பொருந்திய (மா)

மந்திரிகள்-வ-ம்:—மகாராஜப் பிரபூடீகரே வந்தனம்.

ராஜன்-வ-ம்:—சந்தோஷம்! அமைச்சர்களே மங்களமுண்டாகுக, தவிரவும், யானே, அக்கந்தநாதனின் கருணை கடலுக்குள்ளடங்கியும், எனையீன்ற மாதா பிதாக்களின் மாக்ஷிசேர் தபோபலத்தினாலும் வெகு மகிமை பொருந்திய இம்மானிலத்தை ராஜநீதி வழுவாது நாட்டமாய் செங்கோல் கரத்தில் தாங்கி குடிகளின் மனவாட்டத்தை யகற்றி தாட்டிகமுடன் எதிரின்றி அரசுபுரியத் துடங்கினன். ஆதலின், தற்போது நமது நாட்டின் க்ஷேமலாப செழிப்புதனைத் தெரிய சித்தத்தில் எத்தனித்துளேன், அத்தகைய விஷயத்திற்கொத்த விடையளிப்பீராக. அதாவது,

அத்தரவித்தையினற்றிரு க்ஷத்ரியர் என்றமெட்டு.

தன்மையாகவே நம் ராஜியத்தில் பயிர்
தானே செழித்து விளைகின்றதா?
அன்பாய் குடிகள் அனுதினமும் குறை
அணுவேனு மின்றியே வாழ்கின்றாரா?

மங்-வ-ம்:—பிரபூ! தங்களது நாட்டில்கூட தான்ய விளைவு குறையுமா? வருணன்தான் வருஷியாது வர்மம் சாதிப்பானா? அரசே! அதாவது,

## கவி விருத்தம்.

'வேதமோதிய வேதியர்க் கோர்மழை
நீதிமன்னர் நெறியினுக் கோர்மழை
மாதற்கற்புடை மங்கையர்க் கோர்மழை
மாதமூன்று மழையெனப் பெய்யுமே"

எனும் மூதுரைப்படி தங்களது நாட்டில் மாதமும் மும்மாரிப் பெய்து செந்நெல்கள் அதிக செழிப்புடன் விளைந்து வருகின்றன. அதனால் குடிகளும் அதிக க்ஷேமமாக வாழ்ந்து வருகின்றனர்.

ராஜ-வ-ம்:—குதூஹல மடைந்தேன்! தவிரவும்.

### ஷை மெட்டு.

ஆலயங்கள் தோறும் ஆறுகால பூஜை
அனுதினம் நடந்து வருகின்றதா?
சாலவே வேதியர் யாவர்களும் வேத
சாஸ்திரம் ஓதி வருகின்றாரா?

மந்திரி-வ-ம்:—மயிலாஜலனின் அருளைக்கொண்டு இம்மா நிலத்தையாளும் மகிபரே! நம்நாட்டில் திருக்கோயில் கொண் டெழுந்தருளி யிரானின்ற, சிவாலயம், விஷ்ணுவாலயம் எனச் சொல்லப்பெற்ற இவ்வாலயங்களில் நமது குருக்களால் ஆறுகால பூஜைகளும் அட்டியின்றி நடப்பதுடன் வேத மோதும் வேதியர்கள் சதாவேத கோஷ்டங்கள் ஓதி வருகின்றனர் மன்னவா!

ராஜன்-வ-ம்:—பேஷ்! சந்தோஷம்! ஆயினும் இன்னுமொன்று மறந்தேன், அதாவது.

### ஷை மெட்டு.

சிற்றரசர் கர்ப்பம் சரிவர செலுத்தும்
சேதியறி விப்பீர் அமைச்சர்களே?
மற்றும் நம்மூரில் மனக்குறை யிருப்பின்
மறைக்காதென்னிட முறைபீர்களே?

மந்திரி-வ-ம்:—மஹா ராஜப்பிரபு! தங்களின் கருணைக் கட லான காருண்யத்திற்கும், எதிர்த்தவரை ஜெயித்துவரும் வீரா வேசம் பொருந்திய தங்களுக்குக்கூட கப்பம் செலுத்த மறுப்போர் இருக்கின்றனரா? மனுநீதி தவராத மன்னராகிய தங்களின் நாட்டில் மனக்குறைதானிருக்கின்றதா? அப்படி யிருப்பின் அதை யாங்கள் தங்களிடம்கூற ஒளித்தலாகுமா? அய்யனே! அவ்விதக் குறைக ளெல்லாமின்றி கப்பமும் சரிவர சேர்ந்துதான் வருகிறது! குடிகளும் அதிக செழிப்புடன் மென்மேலு மோங்கியே இருக்கின்றனர்.

ராஜன்-வ-ம்:—சபாஷ்! மந்திரி! சந்தோஷம். ஆயினும், என்னதினிடமாக இதுவரையிலில்லாத ஒரு குறை குடிகொண்டு என் மனதை வாதித்து துன்புறுத்துகின்றது. அதாவது, எனக்கு விருதாப்பிய மென்னும் முதிர்ந்த வயதேற்பட்டு இருக்கின்றனது, ஆதலால், "இன்றைக்கிருப்பவர் நாளைக்கிருப்பரென் றெண்ணவோ திட மில்லையே" என்னும் மூதுரைப்படி என் காயத்தை முறை பாராட்டி யிருக்கின்றேனாதலின் எனக்கு நான்கு புத்திரர்களிலிருந்தும் ஒருவரும் இப்பதியை பரிபாலிக்கத் தக்கவர்களாக என் மனதிற்குப் புலப்படவில்லை. தவிரவும், "சிறு பிள்ளை பயமறியாது" என்பதுபோல இன்னும் விளையாட்டிலேயே காலத்தைக் கழித்து வருகின்றனர். ஆதலால், அவர்களின் திறமையை யான் யறிய வேண்டி யிருக்கின்றது இதை யவர்களிடம் தெரிவியாமற்படிக்கு இங்கு அவர்களை யழைப்பித்து, ஆளொன்றுக்கு ஐயாயிரம் ரூபாய் தந்து, வியாபாரம் செய்துவர அனுப்பினால், அதின் மூலமாக அவர்களின் திறமையை நன்கறிந்துக் கொள்ளலாமென என் கருத்து உங்களின் மனநோக்க மெவ்வாறோ?

மந்-வ-ம்:—அரசே அப்படியே செய்யலலாம்! மைந்தர்களை யழையுங்கள்.

ராஜ-வ-ம்:—அடே சேவக்! நீ அதி விரைவில் நமது அரண்மனைக்கேதி, எனது அருந்தவப் புதல்வர்களை யழைத்துவா.

[சேவகன் சென்று அழைத்து வருகின்றான்.]

**முதலாவது குமாரன் வருகிற தரு.**

ஸ்ரீ ரகுவர சுகுணலய என்ற மெட்டு.

**பல்லவி.**

மாமுனிவர் தொழும் மயிலா ஜலா தவ
மான் மழுவேந்திய மகபதி பாலா (மா)

**அனுபல்லவி.**

மாதா பிதாநீ மாமயில் சீலனே
வாதா வள்ளியின் சமேதா நீதா போதா (மா)

**சரணம்.**

சேயனையாளாய் ஜோபித வேலா
நேயமுடன் தியாக ராஜனுக் கனுகூலா (மா)

**மற்ற மூன்று புதல்வர்களும் உடனே வருகின்றனர்.**

புதல்வர்-வ-ம்:—பிதா! நமஸ்கரிக்கின்றோம். தவிரவும், தாங்கள் இதுநாளன்றி இன்று எங்கள் நால்வரையும் இவ்விடத்தில் இத்தகைய முயற்சியுடன் அழைத்தகாரண மேதோ?

ராஜன்-வ-ம்:—மக்களே! அதாவது எனக்கோ விருதாப்பியப் பிராயம் மேலிட்டுவிட்டதால் எனக்குப்பின் என்னைப்போலவே இந்த ராஜியத்தை யார் பரிபாலனம் செய்வீர் என்பது எனக்குத் தோற்றவில்லையாதலால், யான் இப்போது உங்கள் ஒவ்வொருவருக்கும் ஐயாயிரம் பொன் தருகிறேன் அதைக்கொண்டு நீங்கள் நால்வரும் நான்கு திக்கில்சென்று இத்தொகையைக்கொண்டு ஏதேனும் ஒரு வியாபாரம் செய்து அதனால் முன்னேற்றமடைந்து வாருங்கள் பார்க்கலாம்.

புதல்வர்-வ-ம்:—தந்தையே! அதாவது எப்போது தங்களுக்குச் சேய்களா யவதரித்தோமோ, "தந்தைசொல்மிக்க மந்திரமில்லை" என்பனபோல் தங்களின் வாக்கையும் மீறப்போமா? ஆதலால், தங்களின் மனோபீஷ்டப்படியே பொன்னைத் தாருங்கள் சென்று வியாபாரஞ் செய்து வருகிறோம்.

ராஜன்-வ-ம்:—சந்தோஷம்! மைந்தர்களே! மந்திரி, இவர்களை நமது பொக்கிஷ அறைக்கு அழைத்துச்சென்று ஆளொன்றுக்கு ஐயாயிரம் பொன் தருவாய்.

மந்-வ-ம்:—அப்படியே கொடுத்தனுப்புகிறேன் அரசே!

[மந்திரி நால்வரையும் கூட்டிச் செல்கிறான்.]

சீன்:—2] [இடம்:—ரோட்.

பொன்னைப்பெற்ற நால்வரும் வியாபாரம் செய்ய யோசனை செய்து மூவர் மூன்று திக்கிலும் போய்விடுகின்றனர் இம்மூவருக்கும் இளையவனாகிய சுந்தராங்கதன் தனியாக நின்று என்ன வியாபாரம் செய்வதென தோற்றா மல் விசனிக்கிறான்.

சுந்தராங்கதன் தரு.

தாஜராஜ ராஜராஜ அட்டலாராஜஹோ என்றமெட்டு.

தந்தையார் சொன்னபடியே
தான்பொன்னை பெற்றேன் (த)

தாரணி தன்னிலே வியாபாரம் செய்திட
தனித்துயான் வந்தேன்

தத்துவமாகவே சித்தமதுதனில் எத்தொழிலு மறியேன்
மெத்தவே மனமது தத்தளிக்குதுபரி சுத்தனே யான்தெரியேன்
தாயகமுடனே யாயிரம்பொன்னை தந்தா ரெந்தன்பிதா
நேயமாக இதை யானென் செய்வது நீதமலர்ப்பாதா

நீதமலர்ப்பாதா இந்த
சோதரன்மேல் வாதா எந்தன் (த)

சுங்-வ-ம்:—நம் தந்தையானவர் நாம் வியாபாரம் செய்யும் பொருட்டு ஐயாயிரம் பொன்னளித்திருக்கின்றார். இதுபோலவே நமது சகோதரர்களுக்கும் கொடுத்திருக்கின்றார். பொன்னைப் பெற்று அவர்களும் போய்விட்டார்கள், இதில் நான்தான் பிழைக்க வழியின்றி தவிக்கின்றேன். ஆ! ஜெகதீசா!

அய்யா பழனிமலைவேலா என்றமெட்டு.

ஐயாயிரம் பொன்தனை வாங்கி ஒன்றும்
அறியாமல் யான்மனது தேங்கி
வியாபாரம் செய்திடவே ஓங்கி ஒரு
விபரமு மறிகிலேன் சோங்கி (ஐ)

யாரைக் கேட்டறியலாம் சேதி பொன்னை
அதிகமாய் தேடினல்தான் கியாதி
கூற ஒருவரில்லை நீதி இந்த
குவலயந் தன்னிலந் நீதி (ஐ)

சுங்-வ-ம்:—என்ன செய்வது? இன்னதுதான் செய்வதென தெரியவில்லை. தவிரவும், நாமே தனித்து புலம்பிக்கொண்டிருப்பதில் ஏதொரு யோசனையும் ஏற்பட ஹேதுவில்லை. ஆனல் யோசனை செய்துக்கொண்டே இன்னும் சிலதூரம் சென்று பார்க்கலாம்.

[சுந்தராங்கதன் போகிறான்.]

**சீன்:—3.]** **[இடம்:—காடு.**

**ஓர் முனிவர் தவம் புரிந்துக்கொண்டிருக்கின்றார்**
**சுந்தராங்கதன் வருகிறான்.**

**சுந்தராங்கதன் தரு.**

கந்தா காருண்யனே என்ற மெட்டு.

பால ஷண்முகனே பழனி மலை வேலனே
நீமயில் வாகனனே நித்ய ஜெய சீலனே பா

கஜல். ஆலகால முண்டதிரு அம்பலவாணன் சுதா
வேலெடுத்து ஆடிவந்திவ் வேளை காக்கவா நிதா
பாட்டு. வெற்றிமால் மருகா வடிவேல் முருகா பா

கஜல். கொற்றவர் தொழுதிலகும் குமரனே ஜெய சமரனே
உற்றதுணை வேறு இல்லை உதவி செய்திடு மமரனே
பாட்டு. வள்ளி மனோகரனே வானோர்க்குப காரனே பா

கஜல். துள்ளி வந்த சூரர்களை துணித்து உயிர் மடித்தவா
சொல்லி ஜெயம்சேரவென்று சேவர்கொடிபிடித்தவா
பாட்டு. சொர்ன்ன அபிஷேகா சுருளி மலைவாசா பா

கஜல். கர்ன பூபதியே யுந்தன் கழலடியை நாடினேன்
வர்மமோ எந்தனைகார்க்க வருந்தி யானே தேடினேன்
பாட்டு. வந்தாளாய் தருணம் வள்ளலே சரணம் பா

கஜல். சந்தகவி தியாகராஜன் சங்கீத க்ருபாகரா
செந்தில்வளர் கந்தனெனும் ஜெகம்புகழ் பராபரா
பாட்டு. வெற்றி குணதீரா வேண்டினேன் காராய் பா

சுந்-வ-ம்:—ஆ! அமரர்களின் அல்லலையகற்ற அசுரர் குலத்தை அடியோடு வேரறுத்து ஆறுமுகனே! இவ்வடியேன் பிழைக்க வழி பற்றி இவ்வளவு தூரம் வருந்தி வந்தும், தக்கவாறு யோசனை சொல்பவர் யாரையும் காணோம்? (சற்று உற்றுநோக்கி) ஆனல் அதோ யாரோ ஒருதவ சிரேஷ்டர் தவம் செய்துக் கொண்டிருக்கின்றார் நாம் அவரிடம் சென்று இப்பொன்களைத்தந்து வியாபாரம் செய்வதற்குண்டான தகுந்த மார்க்கங்களைத் தெரிந்துச்செல்லலாம், ஆம். அதுதான் தக்கமார்க்கம்.

சுந்தராங்கதன் முனிவரருகில் வந்து கொண்டு வந்த பொன்னை அவரருகில் வைத்து நமஸ்கரிக்கின்றான்.

ஐயா உன்பாதம் போற்றி என்ற மெட்டு.

சுந். பணிந்தேன் பணிந்தேனையா பாலனைக் காருமையா
தனிமையாய் வந்தேனையா தர்க்கார்த்தருள் வீரையா

மு. சந்தத மெந்தனை வந்து பணிந்தது ஏனோ நீதான்
அந்தரொரு விபரந்தனை யோதிடுவாயே நீதான்

சு. ஓதுவேன் கேட்பீரையா உண்மையுடன் தானையா
சேதியறிந்து ஐயா செப்புவீர் மார்க்கமையா

மு. நயமுடனே இனி பயமின்றி கூறுவாய் பக்தனே நீ
இயல்புட னுரைத்திடுவேனதன் மார்க்க மஞ்சிடாதே நீ

சு. வியாபாரம் செய்யவையா வேந்தரென் தந்தையையா
ஐயாயிரம் பொன்னையா அளித்தனர் பாருமையா

முனிவர்-வ-ம்:—ஏ! இராஜபுத்ரா! உன் சங்கதிகளனைத்தும் நீயுரையா முன்னமே ஞான திருஷ்டியா லுணர்ந்தேன் ஆயினும் நீ உனது இரு கண்களையும் மூடிக்கொள்.

சுந்தராங்கதன் தனது கண்களை மூடிக்கொள்கிறான் முனிவர் ஒரு கடிதத்தில் எழுதி சுந்தராங்கதனுக்கு காட்டுகின்றார்.

முனிவர்-வ-ம்:—அப்பா! குழந்தாய்! இதோ இக்கடிதத்தி லெழுதியிருப்பதை வாசித்துப்பார்.

**சுந்தராங்கதன் விருத்தம்.** இராகம்—கேதாரம்.

கொண்டு வந்தால்தான்தந்தை கோமானே காண்பாய்நீதான்
கொடாவிட்ட போதும்தாயார் குணமுட னாதரிப்பாள்
கொடுத்தால்தான் சீர் தங்கைக்கு கோபமின்றி மகிழ்வாள்
கொலைசெய்வாள் மனைவியுன்னை காப்பவன் தோழன் தானே.

சுந்-வ-ம்:—சுவாமி! தவசிரேஷ்டரே இக்கடிதத்தில் வரைந் துள்ள சேதியாவது "கொண்டுவந்தால் தான் தந்தை, கொண்டு வந்தாலும் வாராவிட்டாலும் மனது சலியாமல் காப்பாற்று பவள் தாய், சீரும் சிறப்பும் கொடுத்தால்தான் சந்தோஷிப்பாள் தங்கை, கழுத்தையும் அருக்கத்துணிவாள் மனைவி, ஆபத்து வேளை யில் ஆதரிப்பவன் தோழன் இவைகள் தான் இதில் வரைந்திருக் கின்றது சுவாமி!

முனிவர்-வ-ம்:—இராஜ புத்ரா! இவ்வைந்து வாக்கியங்களை மாத்திரம் மனப்பாடமாக வைத்துக்கொண்டால் உன்னைக் காப்பா ற்றி மேன்மைக்கு கொண்டுவருமென்பதில் சந்தேகமில்லை. ஆத லால், அதி சீக்கிரத்தில் சேல்வாயாக.

சுந்-வ-ம்:—அப்படி செல்கிறேன் முனி நாதா!

[சுந்தராங்கதன் செல்கிறான்.]

சீன்:—4.] [இடம்:—தர்பார்.

**இராஜன் தரு.**

ஸ்ரீராம பாதமா என்ற மெட்டு.

பல்லவி.

ஸ்ரீ முருகா குகா திருநகர் தேசிகா
தேவ தேவ ஷண்முகா ஆ ஆ (ஸ்ரீ)

அநுபல்லவி.

சோமதி பாலா சுந்தர வேலா
சொக்க நாதர் மெய்ப்புகழு மிக்கலியுக நாயகா (ஸ்ரீ)

சரணம்.

வேத வேதாந்தகுண விமல வேலாயுத
விரும்பும் கார்த்திகை மாதர் விரதங்கொள் நற்சுதா
சரத கெம்பீரா
சுப சுகந் தாராய்
சொல்லுந் தியாகராஜனுக் கருள் விவேக யோகா (ஸ்ரீ)

ராஜன்-வ-ம்:—அமைச்சர்களே! கல்யாண்! அமர்வீர். அதாவது, வியாபாரம் செய்துவரும் பொருட்டு சென்ற எனது நான்கு புதல்வர்களில் இன்னும் ஒருவரேனும் வரவில்லையா?

[முதல் புத்திரன் வருகிறான்.]

முதலாவது புத்திரன்-வ-ம்:—பிதா நமஸ்கரிக்கின்றேன்!

ராஜன்-வ-ம்:—வத்ஸா! கல்யாண்! அதாவது நீ வியாபாரம் செய்துவரச் சென்றதின் சேதி என்ன?

முதல்-வ-ம்:—பிதா! தாங்கள் தந்த ஐயாயிரம் பொன்னைக் கொண்டு முத்து வியாபாரம் செய்ததில் ஒன்றுக்கு பன் மடங்கான திரவியங்களை சேகரித்து வந்தேன் பிதா!

ராஜன்-வ-ம்:—சந்தோஷம்! மெச்சினேன்.

[இதற்குள் இரண்டாவது புத்திரன் வருகிறான்.]

இரண்டாவது புத்திரன்-வ-ம்:—தந்தையே! தங்களின் தாளடிக்கு நமஸ்கரிக்கின்றேன்.

ராஜன்-வ-ம்:—புத்ரா! மங்கள முண்டாகுக எழுந்திருப்பாய், தவிரவும் நீ சென்றதின் க்ஷேமலாபங்க ளென்ன?

இரண்-வ-ம்:—தந்தையே! தாங்களளித்த பொன்னைக்கொண்டு இரத்தின வியாபாரம் செய்து திரண்ட திரவியங்களை கொண்டு வந்திருக்கின்றேன்.

ராஜன்-வ-ம்:—சபாஷ்! சந்தோஷம்.

[இதற்குள் மூன்றாவது புத்திரன் வருகிறான்.]

மூன்றாவது புத்திரன்-வ-ம்:—பிதா! வந்தனம் தந்தேன்!

ராஜன்-வ-ம்:—ஆசீர் அருந்தவக் குழந்தாய் எழுந்திரு தவிர நீ சென்ற காரியத்தின் சேதி யென்ன?

மூன்றாவது-வ-ம்:—தந்தையே! தாங்கள் தந்த பொன்னைக் கொண்டு ஜவுளி வியாபாரம் செய்து அதிக லாபத்துடனே வந்திருக்கின்றேன்.

ராஜன்-வ-ம்:—சந்தோஷம்! அதாவது எனது இளைய புதல்வனாகிய சுந்தராங்கதன் எங்கே இன்னும் வரவில்லையே?

[இதற்குள் சுந்தராங்கதன் வருகிறான்.]

தயவில்லாத தென்ன வஞ்சம் என்ற மெட்டு.

பல்லவி.

| | | | |
|---|---|---|---|
| பார்வதியருள் | பாலா | பண் | |
| டாராஞான | வேலா | சீலா | (பா) |

அனுபல்லவி.

கோரும் பக்தர் துதி யாளா
கோப மாகுமா கொடுமை போகுமா
கோபா லன்மருகா எனையாள் ததி (பா)

சரணம்.

பாதக சூரரை பற்றருத்தோனே
பச்சைமயில் மீதேரும் பரங்கிரியோனே
சாதகமாய் தியாகராஜன்
சாற்றியே தமிழ் தூற்றியே புகழ்
தாளடியை சீலமாய் பணிந்தேன் (பா)

சுந்த-வ-ம்:—பிதா! நமஸ்கரிக்கின்றேன்!

ராஜன்-வ-ம்:—எனதருமைக் குழந்தாய்! நீ சென்ற காரியத்தில் லாபந்தானா?

சுந்த-வ-ம்:—பிதா! யான் சென்றதில் அளவிலாத லாபம் சம்பாதித்தேன் இதோ பாருங்கள் (என்று சீட்டைத்தர அதை ராஜன் படித்துப்பார்த்து கோபாவேசமுடன்)

ராஜன்-வ-ம்:—யான் தந்த பொன் எங்கே?

சுந்த-வ-ம்:—பிதா! ஒரு முனிவருக்கு தாங்கள் தந்த ஐயாயிரம் பொன்னை யளித்து தான் ஐந்து சொற்களை வாங்கிவந்திருக்கின்றேன், இதனால் எவ்வளவோ கோடி லாபங்களை யடைவேன்.

ராஜன்-வ-ம்:—சட் சண்டாளா!

விட்டிடு விட்டிடு தங்கையே என்றமெட்டு.

பல்லவி.

சட் எட்டி நில்லடா மடையா நீ
எதுக்கும் உதவா பெருங் காதகஞ்செய்தாய் தடியா (எ)

அனுபல்லவி.

பட்டித்தனமாய் திரிந்து பாதகனே ஐயாயிரம்
பொன்னையே பரிகொடுத்து போக்கிரிநீ வந்தாயோடா (எ)

சரணம்.

அட எது உனக்கித்தனை
சூது அமைந்தது இப்
போது எந்தனிடத்தி லோது
சாதுக்கு பொன்னையளித்து சாஸ்திரங்கற்று வந்தாயோ
போதும்போதும் உந்தன்புத்தி போடா இவ்வூரைவிட்டு (எ)

ராஜன்-வ-ம்:—அடே! துன்மார்க்கா! உன்னைப்போல் பொன்னைப் பெற்றுச் சென்ற உந்தன் சகோதரர்கள் பல வியாபாரத்தை செய்து திரண்ட ஆஸ்திகளை சேகரித்து வந்திருக்க, நீ மட்டிலும் கொண்டு சென்ற பொன்களை எவனே ஒரு முனிவனுக்கு அளித்து இந்த சீட்டையா கொண்டுவந்தாய்? இத்தகைய அறிவற்றவன் எனது ராஜியத்திலிருக்கப்படாது. ஆதலால், இப்போதே இந்த கரை விட்டு அப்புறம் சென்றால் சென்றுவிடு, அல்லாவிடில் இதோ கொலைஞரால் உனை சிரச்சேதஞ் செய்துவிடச் செய்வேன்! போ வெளியில்! இனி ஒரு நிமையேனும் இவ்விடத்தில் நில்லாதே!

சுந்-வ-ம்:—அப்படியே செல்கின்றேன் பிதா!.

[சுந்தராங்கதன் போகிறான்.]

சீன்:—5.] [இடம்:—அரண்மனை வெளி.

சுந்தராங்கதன் வருகிறான்.

சுந்-வ-ம்:—ஹா! ஜெகதீசா! உலகில் மக்களுக்கு பெற்றோர் கல்வி கற்பிக்கும்பொருட்டு எவ்வளவோ திரவியங்களை செலவிடுகின்றனர், அதுபோலில்லாமல் யான் முனிவருக்கு ஐயாயிரம் பொன்னை யளித்து ஐந்து நீதிமார்க்கங்களை கற்றுவந்ததை எனது தந்தை பெருங்குற்றமாக பாவித்து எனை நாட்டைவிட்டு துறத்தினைரல்லவா? ஐயோ! இத்தகைய அரசனும் இவ்வுலகில் உண்டா? தவிறவும், யான் இனி பிழைப்ப தெவ்விதம்.

சுந்தராங்கதன் கண்ணி.

கானகத்தில் நானலைந்து கலங்குரேனடா என்றமெட்டு.

என்னசெய்வேன் ஷண்முகனே எந்தன் விதியோ
எங்கியே வருந்தவைத்தாய் உந்தன் சதியோ (எ)

தந்தையார் எனைவெறுத்து தள்ளினரையோ
தன்னுடைய நாட்டைவிட்டு துரத்தினரையோ (எ)

முனிவருக்களித்த பொன்னால் மோசம்போனேனே
மூண்டதையோ ஆதிவினை மார்க்கம் காணேனே (எ)

திக்கில்லாத பாவியாகி தியங்கலானேனே
தீதுக்காளாய் யானுமாகி தினமும் வாடினேன் (எ)

சுந்-வ-ம்:—ஹா! சாகரமெங்கிலும் தயங்கா புகழ்வகித்த சரவணபவா! தவசிரேஷ்டருரைத்த ஐந்து நீதிமொழிகளில் முதலாவது மொழி உண்மையானது, என்ன செய்யலாம்? நம் விதியிப்படி இருந்தால் நாம் யாரை நோகலாம்? வரும்விதி வழிதங்குமா?

ஆயினும், தந்தையின் குணத்தை யறிந்தாய்விட்டது. இனி நமது தாயினிடத்தில் சென்று இச்செய்திகளையெல்லாமுறைத்து அன்னவளின் மனமோக்கத்தை யறியலாம்.

[சுந்தராங்கதன் போகிறான்.]

சீன் :—6.] [இடம்:—அரண்மனை.

மகாராணியார் அமர்ந்திருக்கும் சமயம் சுந்தராங்கதன் வருகிறான்.

சுந்தராங்கதன் தரு.

நிச்சயமாய் தீர்க்க கடனுனக்கு வழி என்ற மெட்டு.

பல்லவி.

பணிந்தேன் பணிந்தேனம்மா பாலகனுந்தனிட
பாதாரவிந்தம் பணிந்தேன் (ப)

அனுபல்லவி.

கனிந்த மனதுடனே கங்கையதை ஜடையில்
அணிந்த ஈசனருளால் அடியேனை யீன்ற தாயே (ப)

விருத்தம்

அண்ணலா மெனதுதந்தை ஐயாயிரம் பொன்தந்து
திண்ணமாய் வியாபாரந்தான் திடமுடன் செய்யச்சொன்னார்
பொன்னதை யானெடுத்து போகையில் முனிவர்தன்னை
கண்டியா னளித்துவந்து கேள்விகள் கற்றுவந்தேன்.

சரணம்.

பரிவாயிதை யுணர்ந்து பகரொணு கோபங்கொண்டு
பாலனென் மீது சினந்து
தெளிவா யிவ்வூரிலேநீ துஷ்டாயிராதே யென்று
தெரிவித்தார் தூதர்க்குகந்து

உரைத்த செய்தியைக கண்டு
உள்ளக் கவலைக்கொண்டு
சிறப்புடனுன்முன் விண்டு
செல்வேன் விடைதா இன்று (ப)

தாய்-வ-ம் :—கண்மணி! அரசனின் அடங்காக் கோபத்திற் குட்பட்ட உன்னைக் காப்பாற்றயாரால் முடியப்போகின்றது? தவிரவும், தவமிருந்து பெற்றெடுத்த உன்னை எப்படிவிட்டுப் பிரிவது என என் மனதும் சிந்தனையுருகின்றது.

என்னசெய்வேன் இன்னமும் வரக்காணேன் என்றமெட்டு.

பல்லவி.

கண்ணே யுன்னை விட்டுப் பிரியவும்
விதியோ ஆ ஆ சதியோ (க)

அனுபல்லவி.

மன்னவராக்கினை மாரமுடியுமோ
என்வயிறுபற்றி எரிவது வீணுமோ (க)

சரணம்.

கலங்குதெந்தன் நெஞ்சமினி என்னசெய்வேன்
ஆ மகனே
காதகியானுன்னைவிட்டு எங்கன முய்வேன்
தாலமதில் பொல்லா சண்டாளி யானடா
கலக்கங்கொண்டே மனம் கலங்குகிறேனடா (க)

தாய்-வ-ம்:—கண்மணி! குழந்தாய்! எவ்வளவோ தவத்தினல் உன்னையீன்றெடுத்து, இருதியில் காட்டிற்கனுப்பவல்லவோ நேரிட்டது? தந்தையார் சொற்படியே நடந்திருந்தால் இக்கதி நேராதே? என்ன செய்வது? செங்கோலுக்குமுன் சங்கீதம் செல்லுமா? இதை யான் போய் என்ன வற்புறுத்திக் கேட்டுக்கொண்டபோதிலும் மன்னிக்கமாட்டாரே? ஐயோ! இதற்கென்ன செய்வதென்றும் என் புத்திக்கு எட்டவில்லையே?

சுந்த-வ-ம்:—தாயே! என்னதான் வருந்தியபோதிலும் ஈசன் எனது சிரசிலெழுதிய எழுத்து மாறுமா? ஒருகாலும் மாருது! ஆதலால், எனக்கு விடையளியுங்கள் தாயே!

[இதற்குள் தாய் கொஞ்சம் பொன்னை கொடுத்து]

தாய்-வ-ம்:—கண்மணி! இப்பொன்னை உன் வழிசிலவுக்கு வைத்துக்கொண்டுச் செல்வாய்.

சுந்த-வ-ம்:—தாயே! அப்படியே வைத்துக்கொள்கிறேன், யானும் சென்று வருகிறேன். ஆனுல், யான் கூடியசீக்கிரம் வெகு க்ஷேமமாகவே வந்து சேருவேன். ஆதலால் சந்தோஷமுடன் விடையளியுங்களம்மணி.

தாய்-வ-ம்:—குழந்தாய்! அப்படியே சுபசௌக்கியமுடன் சென்று வருவாய். [சுந்தராங்கதன் போகிருன்.

சீன் :—7] [இடம் :—ரோட்.

[சுந்தராங்கதன் வருகிறான்.]

சுந்த-வ-ம் :—ஆஹா! என்ன இது? இப்போதுதான் சகல சங்கதிகளையுமறிந்தேன். அதாவது, "பெற்றவளுக்கே தெரியும் பிள்ளையருமை" என்ற மூதுரையை என் தாயின் மனநோக்கத்திலேயே யறிந்தேன். தவிறவும் முனிவர் சொன்ன இரண்டாவது வாக்காகிய கொண்டுவராவிட்டாலும் தாய் காப்பாள் எனும் மூதுரையையும் அறிந்தேன். ஆனால் நமது தங்கையினில்லத்திற்குச் சென்று பார்ப்போம்.

காமி சத்யபாமா என்ற மெட்டு.

சத்ரு சங்காரா சன்மார்க்க குமரா
சன்மார்க்க குமரா
குமரா குமரா துஷ்ட (ச)

நித்ய ஜெயமங்கள நிமலனருள் மகனே
நிகரில்லா சுப்ரமண்யனே
மண்யனே மண்யனே துஷ்ட (ச)

சரவணப் பொய்கைதனில் அவதரித்த முருகா
சக்ராயுதனின் மருகா
மருகா மருகா (ச)

பச்சைமயில் வாகனா பாவை வள்ளி மோகனா
பரங்கிரி வாழும் யோகனா
யோகனா யோகனா—துஷ்ட (ச)

தியாகராஜன் தமிழ்க்கு தினமருள் புரிகுகா
திருத்தணிகை வாழ் தேசிகா
தேசிகா தேசிகா—துஷ்ட (ச)

[சுந்தராங்கதன் போகிறான்.]

சீன்:—8.] [இடம்:—அரண்மனை.

சுந்தராங்கதனின் தங்கை வருகிறாள்.

சுஜனஜீவனா என்றமெட்டு.

பல்லவி.

நமசிவாயவா திரு
நடன தேசவாழ் தேவா (ந)

அனுபல்லவி.

அமர மாதவா எனை
ஆளவா சிவா
அதிஜோதித நடமேபுரி பரம சங்கரா—தேவா (ந)

சரணம்.

அந்தாரநக ரும்பரும் புக
ழம்பிகா பதே
சுந்தர ரவி பிம்பமுமணி
சந்த்ரமா பதே
சித்தர் போற்றவா சிவ
சின்மயா சிவா
சிவகுகனரு ளழகனும்பணி
சேவைநீ தாவா—வாவா (ந)

வ-ம்:—அடி சகிகாள்! நமது க்ஷேமலாபங்க ளெப்படி?

சகி-வ-ம்:—அம்மணி! தங்களின் தயவைக்கொண்டும், அம்பிகையின் அருளைக்கொண்டும் யாங்கள் சுகக்ஷேமமே, அம்மணி! உனதண்ணர் அதோ வருகிறார்.

தங்கை-வ-ம்:—அண்ணரா? எதற்காக வரவேண்டும்? எப்படி வருகிறார்?

சகி-வ-ம்:—அம்மணி! அவரோ பஞ்சவேஷத்துடன் வருகிறார் தாயே!

தங்கை-வ-ம்:—அடி! அப்படியானல் எனக்கு சீர் கொண்டு வந்தால் உள்ளே வரவிடு, அல்லாவிடில் அப்படியே போகச் சொல்லுங்கள்.

சகி-வ-ம்:—அப்படியே அம்மணி!

[சகி போகிறாள்.]

சீன்:—ூ.] [இடம்:—அரண்மனை.

சுந்தராங்கதன் வருகிறான் சகி தடுக்கின்றாள்.

சுந்த-வ-ம்:—சகி! நீ சீக்கிரமாகச் சென்று எனது தங்கையிடத்தில் யான் வந்திருப்பதாக தெரிவிப்பாய்.

சகி-வ-ம்:—ஐயா! தாங்கள் வெகு தூரத்திலிருக்கும் போதே உமது தங்கை தங்களைப் பார்த்தாள், பார்த்தும் தாங்கள் அந்தம் மாளுக்கு சீதனம் கொண்டுதந்தால் உள்ளே வரவிடும் படியாகவும், இல்லையேல் வந்த வழியே அனுப்பிவிடும்படியாகவும் தெரிவித் தனுப்பினளையா!

சுங்-வ-ம்:—ஹா! அப்படியா? நாம் நினைத்த படியே முடிந் ததே! பேஷ்! காரியம் நன்றாக இருக்கின்றது.

சுருளிமலை மீதுமேவும் சீலா என்ற மெட்டு

அறிந்தே னறிந்தேனிதின் சேதி முனிவர்
அறிவித்த வார்த்தையதின் நீதி தந்தை
அகற்றியதால் ஊரைவிட்டு மருத்துவமாய் இங்கு வந்தேன்
ஜோதி அந் நீதி (அ)

இமைய பார்வதி மகிழுல் லாசா எனை
இக்கெதிக் காளாக்கலாமோ ஈசா யான்
என்னபழி முன் ஜென்மத்தில் உந்தனுக்கு செய்தேனோ தான்
நேசா விசு வாசா (அ)

சுங்-வ-ம்:—முனிவர் சொன்ன மூன்றுவது வாக்கும், எனது தங்கையின் மொழியினல் உண்மையானது. ஆயினும் என்ன செய் யலாம்? இதற்கெல்லாம் காரணம் நமது விதிபயனே. அதாவது, கொண்டுவந்தால் தந்தை, கொடாவிட்டால் தாய், சீர்கொடுத்தால் தங்கை, எனும் மூன்று மொழிகளையும் நன்கறிந்தேன். ஆனல் கொலை செய்வாள் பத்தினி, எனுமொழியை நாம் அறியவேண்டிய தாய் இருக்கிறது. அப்படிக்கொன்றம் எனது மனைவியாள் செய்வ தாக எனக்கு தோன்றவில்லை. சரி சென்று பார்க்கலாம்.

[சுந்தராங்கதன் போகிறன்.]

சீன்:—10.] [இடம்:—மோகன வீடு.

சுந்தராங்கதன் வருகிறன்.

சுந்த-வ-ம்:—நாம் தற்போது நமது மனைவியின் மனதை சோதிக்கும்பொருட்டு இவ்விடம் அடைந்தோம். ஆயினும், அவளி டத்தில் நாமே செல்லலாகாது. ஆதலால் நாம் ஒரு பரதேசிபோல்

வேடமிட்டு இவ்வரண்மனையில் ஓர் புறமாக படுத்துக்கொண்டு இவளது சேதிகளனைத்தும் கண்டறியலாம்.

[சுந்தராங்கதன் ஓர்புரமாக சயனித்துக்கொள்கிருன்.
சுந்தராங்கதன் மனைவியாகிய மோகனு வருகிருள்.]

### மோகனு தரு.

பாரினிலேபுகழ் பாரத புத்திரரே என்றமெட்டு.

மான்மழு வேந்திய மகபதி மகனே—மயில்
வாகனக் குகனே
தேன்மொழியாள் வள்ளி தேவி மனோகரா
தேங்கும் பக்தர்துயர் தீர்க்கும் கிருபாகரா (மா)

### தொகையரா.

ஆண்மைமிகு மசுரர்குலம் அடியோடு போக்கிய
அதிவீர ஆறுமுகனே
காண்கிலே னுனையன்றி கடவுளினியுலகினில்
கார்த்தருள்வாய் ஷண்முகனே.

ஷை கண்ணித்தொடர்.

தங்கவேலேந்திய தாஷ்டீக வேலவனே—வேத
தத்துவ மூலனே
சிங்கமுகத்திருமாலின் மருகோனே
சித்தர் பக்தர் முத்தர் நத்தும் முருகோனே

### தொகையரா.

ஓராருமுகமுடன் ஈராறு புயமழகும்
ஓங்கும் சேவர்க்கொடி துலங்க
காராரும் கஜமுகர்க்கிளைய கந்தப்பனே
கார்த்தருள் பெயர் விளங்க

ஷை கண்ணித்தொடர்.

தித்திக்கும் முத்தமிழ் செப்பிடும் பாவலனும்—ஜெகம்
புகழ் நாவலனும்
பக்தரா மழகர் சாமியருள் கொண்டு
பாடிவைத்தேன் தியாக ராஜன் தமிழ் கண்டு

மோகனு-வ-ம்:—சகல உயிர்களுக்கும் தலைவராகிய சாக்ஷாத் சிவபிரானின் இளைய குமாரனே! ஹே! அம்பிகா! இவ்வடியேனுனை யே சதாகாலமும் நம்பியிருக்கின்றேன். ஆயினும், இன்று என் மன தில் ஏதோ ஒருவித வியாகூலமேற்பட்டு இருக்கின்றது. அதுவும் தவிற, இத்தனை நாளாக அதிகாலையிலேயே வரும் எனது ஆசைக் கணவராகிய சேட்பிரபு இன்னும் வரவில்லை, இதின் காரணமும் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை? ஹா!

உஸ்மத்தேரா ஐசநம்மே என்றமெட்டு

எந்தனுசை நாயகரும் இன்னும் வரக் காண்கிலேனே
சிந்தனையால் மெலியவைத்து சென்றுரெங்கே யான்தோணேனே ()

மாதுஎந்தன் மீதுஆசை மறந்தனரோ பிராணநாதன்
ஏதுசெய்வேன் ஏந்திழையை ஏங்கவைத்தனரே போதன் (எ)

காமபாணம் தைக்குதெந்தன் கண்களை மறைக்குதையோ
நேமமாய் என்கண்கள் ரெண்டும் நாதனையே தேடுதையோ (எ)

வேறு எந்த பெண்கள்மீது விருப்பமுற்று சென்றனரோ
சோருதையோ மனதுமெத்த துலைத்தெனை யகன்றனரோ (எ)

மோகனு-வம்:—என்ன இது? ஆச்சரியம்! எத்தகைய காரிய மாயிருப்பினும் ஒரு நிமிடமேனும் இங்கு வராமல் தங்கமாட்டாரே? தவிரவும் "அவர் நமக்கு தகுந்தஜோடி, நாம் அவருக்குகந்த லேடி" அவர் இதுவரையில் வாரதகாரணத்தின் பொருட்டு நமது அம்ச தூளிகா மஞ்சமானது நிலவகன்ற வானம்போல இருக்கின்றதே சரி இன்னும் சற்றுநேரம் பார்க்கலாம்.

சுந்த-வ-ம்:—(ஓர் புறமாய்) ஹா! இதென்ன மகாவிந்தையா யிருக்கின்றதே? நமது மனைவி, யாரோ ஒரு ஆசைப்புருஷனைத் தேடிப் புலம்புகிருளே? எவ்வளவே நன்னடைக்கையானவள் போலி ருந்த இவளின் குணம் வேறுவிதமாக இருக்கின்றதே? ஆயினும், இன்னும் சற்று நேரம் பார்க்கலாம்.

[இதற்குள் சேட்வருகிருர்.]

சேட் தரு இந்துஸ்தான் பாட்டு.

குதாயகைசி முசிபத்தோமே ஏ ஹிந்துவாலே படேவுவேயிங்
கதம் கதம்பே அமாரேகாதில் சித்தம் கேசாலே படேவுவேயிங்

கஜல். அமாரேமே மாஜோ ஆயே பனு கர்னு
ஓ சுல்லமே கர்னே லகே அமிபர்னு

பாட்டு.

சஜ்ஜர்பை அப்னே மக்கான்கே பாயார் மக்கானே வாலே படேவுயிங்
கஜல். அசுரரோ பச்சோ சோபாபு பிச்சடே
ஓதேக்கு காதில் சேஓகே துக்கடே

பாட்டு.

சுவாசேனே காசுவாகே உசுடே மக்கானுதாலே படேவுவேயிங்
கஜல். சரேப துங்மன் கடோவுவேயிங்
சாலோமே கஞ்சர் சலேவுவேயிங்

பாட்டு.

திலோமே நஸ்டர் சுபேவுவேயிங் ஜிகர்மே சாலே படேவுவேயிங்
கஜல். சலாமி கோடே சேஜிஜ்தம்
ஜமிக் கேனிச்சே படேவுவேயிங்

பாட்டு.

குதாக்கே'முன்கிர் நபிக்கே துங்மன் பிர்கத்லே சப்பார்கடேவுவேயிங்
கஜல். அவா ஜாமானே கிபி கிடினேயர்
ஓசல்மே கர்னேலகே சராசர்

பாட்டு.

சுனுமு பரியாத் ஏகிங்க்து ஜாக்கர் சுபானமே சாலே படேவுவேயிங்

சுந்-வ-ம்:—ஐயோ! இவன் யாரோ தெரியவில்லையே? சேட்டு போல இருக்கின்றானே, ஆயினும் இன்னும் கவனிக்கலாம்.

மோ-வ-ம்:—வடிவிற் சிறந்த சேட் பியாரா!

ஆரேசையா என்ற மெட்டு.

வாரும் வாரும் வல்லவரே உட்காரும்
வாகுட னென்னைச் சேரும் (வா)
சோருது மனம் பாராய் சுகித்து சுகந்தாராய்
சுந்தரியா ளெந்தனையே
தந்திரமாய் விந்தை யுடன் (வா)

இதுவரையில் நீரே எங்கு சென்றிருந்தீரே
ஏந்திழையாள் தேடியுனை
சாந்த முடனே யிருந்தேன் (வா)

மோகனு-வ-ம்:—வாருங்கள் சேட் பியாரா! இது வரையில் எங்கு சென்றிருந்தீர்கள்? சரி உட்காருங்கள், யான் ஒரு பாட்டு பாடுறேன்.

சேட்-வ-ம்:—பியாரி! அச்சா காறு போல்!

மோனு-வ-ம்:—நல்லது பியாரா!

மோகனு தரு இந்துஸ்தான்.

மைனகாதில் கேகதம்பர் அப்னுஜப் சே ரக்தியா
உஸ்னேமு கூபேரேகர் கருதன் பேகஞ்சர் ரக்தியா

கஜல். பவுஞ்சாஜப் மேராகவுதர் னுமுலேக்கர் உன்க்கேபாஸ்
பாட்டு. உஸ்குஜாவிம் னேகபஸ்மே பர்கத்தர் கர்ரக்தியா (மை)

கஜல். அப்னே ஏக்தா இகாதாவா தாஅசிஞே மவுனி
பாட்டு. மைனே உஸ்க்கே சாமுனே ஆயினுலாக்கர் ரக்தியா (மை)

கஜல். பாதுமுர்தன் பீதமுசே பல்குமானி இஸ்கதர்
பாட்டு. கபுருகுதுவா கர்மேரே சினேபே பத்தர் ரக்தியா (மை)

கஜல். மேந்திமல்னே காஉவா சோக் உஸ்குல் பமுகு
பாட்டு. கூம்பரேசை தாயேதில் ஆத்தோங்சே மல்கர் ரக்தியா (மை)

சேட்-வ-ம்:—அச்சா! வாரே வா பியாரி! இதோ இந்த முத்தாரத்தை நீ பாடிய பாடலுக்கு பதிலாக எடுத்துக்கொள்.

சுந்த-வ-ம்:—பேஷ்! பேஷ்! நன்றாக இருக்கின்றது. இச்சண்டாளி, நாம் உயிருடனிருக்கும்போதே வேறு காதலனை காதலிக்கின்றாளே? அதாவது,

கலித்துறை.

கைப்பிடி நாயகன் தூங்கையிலே யவன் கையை யெடுத்
தப்புறந் தன்னி லசையாமல் முன்வைத் தயல் வளவி
லொப்புடன் சென்று துயினீத்துப் பின்வந் துறங்குவளை
யெப்படிநான் நம்புவே னிறைவாகச்சி ஏகம்பனே.

எனும் பட்டினத்துப் பிள்ளையாரின் வாக்கு இவ்விடத்திலல்லவோ பலித்தது, பேஷ்! பேஷ்! "யாரை நம்பினும் மாதரை நம்பொணு"

எனும் முதியோர்மொழி நியாயமாய் முடிந்ததல்லவா? சரி இன்னும் இக்காதகியின் சேதிகளனைத்தும் அறியலாம். ஏ! மனமே! வீணில் பதராதே! என்னதான் நடப்பினும் பொருத்திரு.

மோகன-வ-ம்:—பியாரா! ஏதோ நீ ஒரு பாட்டு பாடுங்கள் பார்க்கலாம்.

சேட்-வ-ம்:—அச்சா! மைஜோருக்கே பியாரி!

சேட் இந்துஸ்தான்.

| | | |
|---|---|---|
| | சையங்தேரி கோதிமே | கேந்தாபன் ஜாவுங்கி |
| கஜல். | மேரேசையாங்கு | பூக்கு லகீது |
| பாட்டு. | லட்டுஅர்பர்பிசோட்டி | ஜலபிபன்ஜாவுங்கி (சை) |
| கஜல். | மேரேசையாங்கு | பியாஸ்கலகீதோ |
| பாட்டு | நத்திஅவுர்நாலா | சோட்டி ஜம்னபன் ஜாவுங்கி (சை) |
| கஜல். | மேரேசையாங்கு | நீந்துலகிதோ |
| பாட்டு. | பல்லங் அவர்நாலி | சோட்டிதைக்காபன் ஜாவுங்கி |
| பாட்டு | சையாங்தேரி கோதுமே | கேந்தாபன் ஜாவுங்கி (சை) |

மோகன-வ-ம்:—பேஷ்! பேஷ்! வெகு நன்றுகவே இருக்கிறது. பியாரா! அதிருக்கட்டும் எங்கே வெத்திலைபாக்கு கொண்டுவந்தீரா?

சேட்-வ-ம்:—மைஜோருக்கே பியாரி! நம்பள்கி மறந்து வந்து பூட்டான்.

மோ-வ-ம்:—சரி சீக்கிரம் கடைக்குச்சென்று வாங்கி வாருங்கள் அதில்லா விட்டால் நமக்கு ஷோக்காயிராது?

சுந்-வ-ம்:—ஆஹா! என்ன அகம்பாவம்? ஷோக்கு கூடவா? அடி போக்கற்ற கழுதையே! சரி இன்னும் என்ன செய்கிருள் பார்ப்போம்.

சேட்-வ-ம்:—பியாரி! கிலி வாங்கி வருகிறேன் காசுகொடு?

மோ-வ-ம்:—இந்தா பியாரா! காசு.

சேட் காசுவாங்கி வருகையில் சுந்தராங்கதனைக் கண்டு.

சேட்-வ-ம்:—இதோ யாரோ ஒருசாது படுத்திருக்கிறன், இவனை எழுப்பி அனுப்பலாம் கிலி வாங்கிவர. ஏ! சாதுஜி! நீ போய் பைசா கிலி வாங்கிவா.

சுந்-வ-ம்:—(தனி) பேஷ்! "கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததைப்போல" இவனே வந்து நம்மிடம் பேசிவிட்டான். (காசை கையில் வாங்கி) சரி, நான் சென்று பீடாவாங்கி வருகிறேன், நீங்கள் உள்ளே போகாமல் இவ்விடத்திலே நில்லுங்கள்.

சேட்-வ-ம்:—அச்ச மாராஜ் ஜல்தி யாவ்.

சுந்தராங்கதன் வெற்றிலைப்பாக்குக் கொண்டுவந்து.

சுந்-வ-ம்:—இந்த வெற்றிலையை பீடா (ரதம்) போல் செய்தோம், இது நமக்கும் அவளுக்கும் தான் தெரியுமேயொழிய, மற்றவர்களுக்கு தெரியாது. இதன் பின்பு என்ன நடக்கிறது பார்ப்போம், ஏய் சேட்ஜி! இதோ பீடா!

சேட்-வ-ம்:—பேஷ்! அச்சா! கேத்தும்.

சுந்-வ-ம்:—கொடுக்கிறேன். ஆனால் ஒன்று, நான் ஒரு பாட்டு பாடுவேன், அது போலவே நீயும் பாடவேண்டியது நான் ஆடுவது போலவே ஆடவேண்டியது அப்படியெல்லாம் செய்தால்தான் இந்த பீடாவை கொடுப்பேன்?

சேட்-வ-ம்:—அச்சா! சாது ஜீ!

இருவரும் பாடுகிறார்கள்.

சுந்தராங்கதன் தரு

ராமபஜன ஹோதியா கமல முகே (ரா)
ராம லக்ஷ்மண பரத சத்ருக்கன
தரிசன கௌன பஜே கமல முகே (ரா)

சேட்டு பாடுகிறான் சுந்தராங்கதன் சேட்டை உதைக்கின்றான்.

சேட்-வ-ம்:—என்ன சாதுஜீ என்க்கி உதைக்கிறியே.

இருவரும் பாடிக்கொண்டு ஆடுகிறார்கள்.

சேட்-வ-ம்:—அச்சா! பஸ் சாதுஜீ! இந்தா முத்துக்கி ஆரம் உனக்கு இனும் நம்ப குடுக்குரான், நீ போட்டுக்கோ.

சுந்-வ-ம்:—சந்தோஷம்! இந்தா கிலி.

சேட் பீடாவை வாங்கிக்கொண்டு போகிறான் சுந்தராங்கதன் படுத்துக்கொள்கிறான். சேட் பீடாவை மோகனவிடம் கொடுக்கிறான்.

சேட்-வ-ம்:—ஏ! பியாரி! இந்தா நிம்பிள்கி கிலி!

மோகனு-வ-ம்:—(கையில் வாங்கி) ஆ! இது என்ன இவ்வளவு அழகாக இருக்கின்றதே? இந்த பீடா செய்வதற்கு நமக்கும் நமது நாயகருக்கும் தான் தெரியுமே யொழிய மற்றவர்களுக்கு தெரியாதே? ஒருவேளை நமது நாயகர்தான் தன் தகப்பனால் துறத்தப் பட்டப்பின் ஒருவேளை வீதி வழியாக வந்து இந்த சேட்டைக் கண்டு கட்டிக் கொடுத்தனுப்பினரோ? எல்லா விபரமும் இவரையே கேட்டுத் தெரிந்துக்கொள்ளலாம். சேட்ஜி! இந்த பீடா ஏது?

சேட்-வ-ம்:—நம்பள்கி இந்த கிலி யாரோ ஒரு சாது ஜீ வாங்கிக் கொடுத்தான். நம்ப அதை வாங்கிக்கினு வந்தான்.

மோகனு-வ-ம்:—அந்த சாது எங்கே யிருக்கிறான்?

சேட்-வ-ம்:—பியாரி! அதோ படுத்துக்குனு இருக்கிறான் பார்.

மோ-வ-ம்:—ஆஹா! நமக்கு என்ன மதியீனம்? முன்பின் யோசித்துப் பாராமலேயே இது வரையில் சந்தோஷத்துடனிருந்தோம். இதை யெல்லாம் நமது நாயகர்தான் பாடுத்து பார்த்திருந் திருக்கின்றார். தவிரவும், இந்த பீடாவும் செய்ய நமது நாயகருக்கன்றி மற்றவருக்கு தெரியாது.

அப்பா மாண்டாயோ என்ற மெட்டு.

பல்லவி.

| | | |
|---|---|---|
| என்ன செய்குவேன் | எந்தன் விதிக்கே நான் | |
| எக்கெதி நேருமோ | இக்கொடுமைக்கே தான் | (எ) |

அனுபல்லவி.

| | | |
|---|---|---|
| மன்னவர் என்நாதன் | மாதுயான் செய்ததை | |
| கண்ணின் முன்பாகவே | கண்டதாலிக் கோதை | (எ) |

சரணம்.

| | | |
|---|---|---|
| ஏது மறியாமல் | ஏந்திழையாள் யானே | |
| ஏக போகமாக | சோரமே போனேனே | |
| வாதென்ன வருமோ | விபா மறியேனே | (எ) |

மோகனு-வ-ம்:—ஹா! இனி யென்ன செய்வது? நமது விஷயங்கள் யாவும் நமது நாயகருக்கு பட்டம்பகல் வெட்டை வெளிச்சமாக தெரியலாச்சுதே? பரம ரஹஸ்யங்கள் யாவும் அம்பலத்திற்கு வர காலம் நெருங்கிப்போச்சே, ஐயோ! இதை நினைக்க நினைக்க மனக்கவலை யதிகரிக்கின்றதே. என்ன செய்வது? வருங்கதி வரவே செய்யும் நம்மாலாவது ஒன்றுமில்லை. ஆதலால், இதற்குகந்த குக்ஷிகளை நாம் தேடியே தீரவேண்டும்.

சேட்-வ-ம்:—மைஜோருக்கே பியாரி! என்னயோசனைசெய்ரே?

மோ-வ-ம்:—என் முத்தாரம் எங்கே?

சேட்-வ-ம்:—பியாரி! கூலிகொடுத்த அந்த சாதுஜீயிடம் கொடுத்துவிட்டேன்.

மோ-வ-ம்:—ஆஹா! இதற்கென்ன செய்கின்றது? சரி வ! சேட் பியாரா! நீர் இனி இவ்விடத்தில் நிற்கவேண்டாம் இப்போதே போய்விடுங்கள், பிறகு பேசிக்கொள்ளலாம்.

சேட்-வ-ம்:—அச்சா! பியாரி! (சேட் போகிறான்.)

மோகனு-வ-ம்:—நமது ஆசைக்காதலராகிய சேட் போய்விட்டார். இனி நாம் சும்மாயிருக்கப்படாது, நமது நாயகனை தொலைக்க வழிதேடவேண்டும்; அப்படி தொலைத்துவிட்டால் தான், சேட் நம்மிடம் மறுபடியும் வர ஏதுவாகும். (மோகனு சற்று திகைத்து) ஆ! சகிகளே! ஆ! தந்தையே!

**பண்டிதமோதிலால் நேரை என்றமெட்டு.**

**பல்லவி.**

எந்தன் முத்தாரத்தை யாரே எடுத்து சென்றாரே (எ)

**அனுபல்லவி.**

எடுத்து சென்றாரே மனதை
கெடுத்தகன்றாரே ஐயோ (எ)

**சரணங்கள்.**

சிந்தை மிக வாடுதையோ திரேகம் நடுங்குதையோ
அந்தமிகும் முத்துமாலை தன்னைக்காணேனே
தன்னைக்காணேனே மார்க்க
மொன்றுந் தோணேனே ஐயோ (எ)

பாவிஎந்த கள்ளர்களோ பரித்ததனைச் சென்றார்களோ
பாதகியாள் என்னசெய்வேன் பரமனே காராய்
பரமனே காராய் இது
தருமமோ கூராய் (எ)

**இதற்குள் மோகனுவின் தந்தையாகிய பிரதாபசீலன் வருகிறான்.**

பிர-வ-ம்:—குழந்தாய்! மோகனு! ஏன் இப்படி புலம்புகிறாய்? உன்னை யார் என்ன செய்தனர்?

மோ-வ-ம்:—பிதா! என்னையாரும் ஒன்றும் செய்யவில்லை! யான் அயர்ந்து நித்திரை செய்துக்கொண்டிருந்தேன், அது சமயத்தில் யாரோ கள்ளன் உள்ளே பிரவேசித்து, என் கழுத்திலிருக்கும்

முத்தாரத்தைக் கவர்ந்துச் சென்றுவிட்டான்! நித்திரைத் தெளிந்து எழுந்து பார்த்ததும் முத்தாரத்தைக் காணேம், அதற்காகவே வருந்துகின்றேன். தவிரவும், ஒரு அரசர் வீட்டில் களவுபோவதென்றல் சாமான்யமான காரியமா? இது நமக்கு பெரும் அவமதிப்பல்லவா? ஆதலால், அக்கள்ளனை எப்படியாவது கண்டுபிடித்து கொலை செய்துவிடுங்கள் பிதா!

பிர-வ-ம்:—குழந்தாய்! நீ போ! யான் அத்துஷ்டனை உன் மனப்படியே கொன்றுவிடுகிறேன். அடே சேவக்!

சேவ-வ-ம்:—ஏன்? சுவாமி!

பிரதாபசீலன் தரு.

வாவா கார்த்திகா என்றமெட்டு.

பல்லவி.

கள்ளன் எவனே மாலை
கவர்ந்ததை பிடித்து நீர் நிமையில் கொண்டு வருவீர் (க)

அனுபல்லவி.

அல்லலை தூரி ஆக்கினை மீரி
அபகரித்தேகிய
அன்னிதக் காரனை பின்னமுறச் செய்வேன் (க)

சரணம்.

கத்தியால் தானே கண்டிப்பேன் யானே
கதரிட இதுததி நிதமுட னவனையே
கதித்து கொதித்து வதைத்து எரிகுவேன் (க)

பிர-வ-ம்:—அடே! காவலர்களே, நீங்கள் அதிவிரைவில் சென்று அக்கள்ளனைப் பிடித்து என்னிடம் கொண்டுவர வேண்டாம், நீங்களே கொலை செய்து போட்டு விட்டு வாருங்கள்.

சேவ-வ-ம்:—அப்படியே பிரபு!

சேவகர்கள் தேடிவருகையில் சுந்தராங்கதன் படுத்திருக்க அவன் கழுத்தில் மாலை யிருக்கக்கண்டு கொலைஞர் சுந்தராங்கதனை கொலைகளத்திற்கு கூட்டி வருகின்றனர்.

சீன் :—11.] [இடம்:—கொலை களம்.

கொலையாளிகள் சுந்தராங்கதனை அழைத்து வருகின்றனர்.

கொலை-வ-ம்:—அடே! இப்படிதான் நில்லு.

சுந்த-வ-ம்:—ஐயா! எதற்காக என்னை இங்கு அழைத்து வந்தீர்கள்?

கொலே-வ-ம்:—எதற்காகவா? இதோ உன் கழுத்திலிருக்கும் முத்தாரத்தை நீ திருடியதற்காக.

சுந்த-வ-ம்:—என்ன! யானு முத்தாரத்தை திருடினேன்? ஐயோ! இதென்ன அபாண்டமான பழியாக இருக்கின்றதே?

கொலே-வ-ம்:திருடாமல் இந்த முத்துமாலே உன்னிடம் எப்படி வந்தது?

சுந்-வ-ம்:—அப்படி கேளுங்களேயா! யான் அவ்விடத்தில் சயனித்திருக்குங்கால், இந்த மாலேயை எனக்கு ஒருசேட் இனுமாக கொடுத்தார்.

கொலே-வ-ம்:—பேஷ்! பேஷ்! மகா ஜெகஜாலக் கள்ளனுக இருக்கின்றாயே? ராஜ குமாரத்தியின் மாலேயை உனக்கு சேட் கொடுக்க காரணமென்ன? அதெல்லாம் முடியாது. திருடியவன் நீ தான். ஆதலால், அரசன் உன்னே கொலே செய்து வரும்படியாக ஆக்யா பித்திருக்கின்ருர், ஆகையால் நீ இன்னும் பேசுவற்கு நியாய மில்லே.

சுந்-வ-ம்:—அப்படியா? இந்த ராஜாங்கத்தில் நீதி நியாய மொன்றுமில்லேயா?

கொலே-வ-ம்:—அடே! திருட்டுப்பயலே நீதியாவது? நியாயமாவது? ராஜகுமாரத்தியின் முத்தாரத்தை கவர்ந்து வந்த தல்லாமல், இப்போது பாசாங்கா செய்கின்ருய்?

சுந்-வ-ம்:—அப்படியா சங்கதி? ஏ! ஈசா! இமையப் பார்வதா தேவியினுல்லாசா! பக்தர்களுள்ளத்தில் நிறைந்துலவும் வாசா! பத்திரகாளியுடன் அம்பலத்திலாடிய நடன சபேசா! சகல வுயிர்களுக்கும் தலேவரான சர்வேசா! இக்கதி எனக்கு இப்படி வருமென என் மனதில் கிஞ்சிற்றேனும் நினேக்கவில்லேயே? ஏ சரவணபவா! சடேசுஷரபவா! திருமுகபவா! நிகழொளிபவா! திருத்தணிகையில் வாழ்பவா! தியங்கிட அசுரர்களே தீவிரமாய் வேலினுற் குத்திச் சாய்த்தவா! இதுவும் உனக்கு சம்மதந்தானு?

**கற்பிற் சிறந்த யெந்தன் கனியே என்ற மெட்டு.**

**பல்லவி.**

ஷண்முகா இப்பழிக்கு யானே
என் செய்வேனே, துன்பந்தானே, அடைந்தேனே (ஷ)

**அனுபல்லவி.**

ஒன்றுமறியாயென்னே உரமுடன் பிடித்து
ஓஹோ அழைத்துச்சென்று மனதுபோலடித்து
துன்பமுற வாக்கினே தொடுத்தனர் துடித்து
துரோகியான் செய்ததொரு விதியோ
உந்தன் சதியோ, முன்னுள் கதியோ, இது நீதியோ (ஷ)

க்ஷத்ரிய வம்சமதில் சேயனுய் பிறந்து
தந்தையர் வெறுத்ததால் தாயையும் மறந்து
எத்துள்ள மனைவியால் இப்பழி நிறைந்து
எந்தன் மனந்துடிக்க தானே
தர்மந்தானே வர்மமேனே கர்மந்தானே (ஷ)

சங்-வ-ம்:—முன்பு முனிவர் சொன்ன நான்காவது வாக்கியமாகிய "கொலைசெய்வாள் பத்னி" என்னும் வாக்கியமும் பலித்தது, ஆஹா! அச்சண்டாளிக்கு என்ன தைரியம் பார்த்தனையா? இந்த சூதுமார்க்கங்களை யெல்லாம் கொஞ்சமேனு முணராமல் அவளது தந்தையும் இத்தகைய கொடிய தண்டனையை விதித்தானே? என்ன செய்வது? கங்கையை ஜடா பாரத்திலணிந்த கடவுளின் இளைய புதல்வனுகிய

**வேலனே இந்த வீணனை ஏன்படைத்தாய் என்றமெட்டு.**

பல்லவி.

கந்தனே பொல்லா சிந்தனையால் மெலிந்தேன்—எனை
காராய் எதிர்வாராய் ததிபாராய் வரந்தாராய்—சிவ (க)

அனுபல்லவி.

தந்தை முதல் தாயும் தங்கையை வெறுத்து
தவித்தேன் சுக பொழித்தேன் யான்
விழித்தேன் கரங் குவித்தேன்—சிவ (க)

சரணங்கள்.

கள்ளனென்றே யென்னை காவலர் பிடித்தார்
கவலை யடைந்திட கட்டியு மடித்தார்
தொல்லை யுர பழி தொகுத்துமே படித்தார்
தோணேன் விதிதானே துய ரானே னுயிர்பூணேன்—சிவ (க)

முனிவர் சொன்னவாக்கு முற்றும் மெய்யானதே
மொய்க்குழலாள் தன்னுல் மானமும் போனதே
அனியாய மாகவே அரும்பழி யானதே
அய்யோ இதுமெய்யோ துன்மையோ நன்மையோ—சிவ (க)

சங்-வ-ம்:—என்னதான் புலம்பினும் இப்பழியென்னைவிட்டகலப்போகின்றதா? அதுவொன்றுமில்லை. 'வரும்விதி வந்தால் படுங்கதி பட்டே தீரவேண்டும்'' எனும் மூதுரையானது பொய்யுமா? வேண்டாம் மனமே! கலங்காதே, உயிர்த்துறக்க என்றைக்கும் சித்தமாகவேயிரு. ஐயா! கொலையாளிகளே! உங்களைதான் யான் வெறுப்பதில் யாது பயன், அரசனின் கட்டளையை நீங்கள் தான் மீறமுடி

யுமா? வேண்டாம், எனது கழுத்தை வணங்கிக் கொடுக்கின்றேன் உங்கள் காரியத்தை பூர்த்தி செய்துக்கொண்டு சென்று அரசனுக்கு சேதி சொல்லுங்கள்.

கொலை-வ-ம்:—அப்படியே வெட்டுகிறோம், உங்கள் தலையைக் குனியுங்கள்.

**சுந்தராங்கதன் தலையைக் குனிகிறான் கொலையாளிகள் வெட்ட வாளை ஓங்குகின்றனர் இதற்குள் சுந்தராங்கதனின் தோழன் ஓடிவந்து தடுக்கின்றான்.**

தோழன்-வ-ம்:—கொலையாளிகளே! வேண்டாம் நில்லுங்கள். ஏ! நேசா! இனி பயப்படாதே! உனக்கொன்றும் ஆபத்து நேரிடாது. ஐயா! கொலைஞர்களே! இதோ இந்த திரவியத்தை பெற்றுக் கொண்டு இவரை விட்டு விடுங்கள், உங்களுக்கு ஒரு ஆபத்தும் நேரிடாமல் கானகத்தில் வாழக்கூடிய மிருகங்களில் ஏதேனுமொன்றைக்கொன்று அதின் உதிரத்தை கொண்டுபோய் உங்கள் அரசனிடம் இவரை கொன்றுவிட்டதாக தெரிவித்து விடுங்கள்! இப்புண்ணியம் உங்கள் ஏழுபிறப்பிற்கும் காப்பாற்றும்.

கொலை-வ-ம்:—அப்படியே செய்கிறோமையா!

[கொலையாளிகள் போய்விடுகிறார்கள்]

சுந்-வ-ம்:—சிறுபிராயமுதல் அருமை மிகுந்த ஆசை நண்பரே! தற்போது என்னைக் காப்பாற்றிய இந்த உபகாரத்திற்கு பதிலாக யான் என்ன கைம்மாறு தங்களுக்கு செய்யப்போகிறேன். என் விதி யிப்படியெல்லா மிருந்தது ஆயினும் யான் இனிமீதாவது எங்கேனும் சென்று பிழைத்துக்கொள்கிறேன். சென்றுவரட்டுமா?

**தோழன் போகிறான் சுந்தராங்கதன் தனிமையாக நிற்கிறான்.**

சுந்-வ-ம்:—ஆ! ஈசனின் இளையப் புதல்வனை சித்ரமயில் வாகனே! முனிவர் சொன்ன ஐந்தாவது மொழியாகிய உயிர் காப்பான் தோழன் என்பதும் உண்மையாயிற்று. ஆ! அம்முனிவர் யாராயிருக்கலாம்? பின் நடக்கும் காரியங்களை யெல்லாம் முன்னதாகவே ஒன்றும் ஒளியாமல் சொன்னரே? தற்போது நாம் அவரை யல்லவோ கடவுளாக துதிக்கவேண்டும். இனி நாம் இந்நாட்டிலிருக்கப்படாது, ஆதலால் நாம் தேசாந்திரியாக ஒவ்வொரு ஊர்களுக்கும் சென்று ஆங்காங்குள்ள நிலைமைகளை யெல்லாமறிந்து சந்தேகங்களை நிவர்த்தி செய்துக்கொள்ளலாம்.

சீன்:—12] [இடம்:—ரோட்.

சுந்தராங்கதன் வருகிற கண்ணி.

சீராரும் தென்கழனி என்ற வர்ன மெட்டு.

அந்தரத்தோர் பணியும் செந்தூர் வடிவேலனே
ஆறு முகமான சீலனே அரன் மகனே
அனந்த வள்ளி லோலனே (அ)

அசுரரை கருவறுத்து அமரர் குறை தீர்த்தவனே
ஆடுமயில் விநோதனே அருள் சுகனே
அன்பர் புகழ் கந்தநாதனே (அ)

பக்தர்கள் துதிக்கும் மலை பாலாபிஷேக மலை
பாவ மகற்றிடு மலை பழனி மலை
பதவி யளித்திடும் மலை (அ)

தேனுபிஷேக மலை தெய்வீகத்தணிகை மலை
தேடிப்பணிந்திடும் மலை தேசிகன் மலை
செஞ்சேவற் கூவிடி மலை (அ)

தெய்வகுஞ்சரி சமேதா தேடி நொந்தேன் கந்த நாதா
தேவி யருளிய வேதா தியாகராஜனின்
தமிழ்க்கருள் தந்தாளாய் போதா (அ)

சுந் வ-ம்:—ஆஹா! இதேதோ ஒரு நகரம் வெகு செழிப்புடனும் தோற்றுகின்றது? இவ்வூரில் தான் நாம் சென்று நமக்கு ஏதேனும் ஒரு தொழிலில் அமர்ந்து இருப்போம. தவிரவும், நாம் இந்த உருவத்துடன் செல்வோமாயின், நமது கொள்கை நிறைவேறுவது கடினமாகி விடுமாதலால், நாம் ஒரு பைத்தியக்காரனைப் போல் உருகொண்டு இவ்வூரில் திரிந்தால் பிறகு என்ன நடக்கிறது யெனஅறிந்துக்கொள்ளலாம்.

சீன் :—13.] [இடம்:—தர்பார்.

வல்லவ ராஜன் சபைக்குவரும் தரு.

தட்டுமலர் பிரமனை குட்டியே சிறை என்ற மெட்டு.

பல்லவி.

சடையிலிளம் பிறையும் படவரமு மணிந்து
விடமதை யுண்டபரனே அடியே னெனை
கடவுளே காருமரனே (ச)

அனுபல்லவி.

திடத்துடனே அயனின் சிரமொன்றறுத்தவனே
சிறித்து திரிபுறத்தை தணலா யெரித்தவனே
உடுத்திட புலித்தோலை யுரித்துத் தரித்தவனே
உம்பர்கள் துயரதனை யோட்டி மறித்தவனே (ச)

பார்த்தனுடனே யுத்தம் புரிந்து களித்தவனே
பாசுப தாஸ்திரத்தை பரிந்து அளித்தவனே
ஆர்த்த பத்மாசுரனுக் கருள் தந்து முளித்தவனே
அலரி ஐமேவலங்காட்டில் அன்று ஒளித்தவனே (ச)

காளியுடன் கனக சபையில் நடித்தவனே
கலங்கிய நாரைக்கன்று காக்ஷி கொடுத்தவனே
மாலயன் காணு உரு மார்க்க மெடுத்தவனே
மலையரசன் மகளை மணமே முடித்தவனே (ச)

நந்திவாகன மேறும் நளின கெங்காதரனே
நாதாந்த வேதகுண நீதசங்கீதரனே
மைந்தன் தியாகராஜனின் மொழிக்குக் கிருபாகரனே
மாதவத்தோர் பணியும் மாக்ஷிசேர் சங்கரனே (ச)

வல்ல-வ-ம்:—ஏ! மந்திரிகாள்! அனைவரும் அதிஜாக்கிறதையுட னிருக்கின்றீர்களா?

மந்-வ-ம்:—அரசே! அனைவரும் அதிஜாக்கிரதையுடனே தானிருக்கிறோம். ஆயினும் ஒரு சந்தர்ப்பம், நமது அரண்மனையின் வாயற்படியின் வெளியில் யாரோ ஒரு பைத்தியக்காரன் வந்திருக்கிறான், நாம் பேசுவதுபோலவே பேசுகிறான், நாம் சிரித்தால் சிரிக்கின்றான், அழுதால் அழுகிறான், பாடினல் பாடுகிறான், ஆடினல் ஆடுகிறான் அதைப் பார்க்க எங்களுக்கு அதிக விந்தையை யுண்டு பண்ணுகிறது, ஐயனே.

வல்ல-வ-ம்:—ஹா! அப்படியா? ஆனல் அடே சேவக் நீ சென்று அவனை அதிசீக்கிரத்தில் இங்கு அழைத்துவா.

சேவகன் சென்று சுந்தராங்கதனை அழைத்து வருகிறான்.

சேவ-வ-ம்:—இவர்தான் அரசே!

சுந்-வ-ம்:—இவர்தான் அரசே!

வல்ல-வ-ம்:—சரிதான் நீ போடா!

சுந்-வ-ம்:—சரிதான் நீ போடா!

வல்ல-வ-ம்:—ஐயா! தாங்கள் யார்?

சுந்-வ-ம்:—ஐயா! தாங்கள் யார்?

வல்ல-வ-ம்:—என்ன இது? ஆச்சரியம்! நாம் பேசுவதுபோலவே இவனும் பேசுகிறனே. ஓய்! நீ எங்கே இருப்பது?

சுந்-வ-ம்:—என்ன இது? ஆச்சரியம்! நாம்பேசுவதுபோலவே இவனும் பேசுகிறனே. ஓய்! நீ எங்கே இருப்பது?

வல்ல-வ-ம்:—என்ன ஐயா! உனக்கு பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன?

சுந்-வ-ம்:—என்ன ஐயா! உனக்கு பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன?

வல்ல-வ-ம்:—இல்லே காரியப் பைத்தியக்காரனே?

சுந்-வ-ம்:—இல்லே காரியப் பைத்தியக்காரனே?

வல்ல-வ-ம்:—என்ன இது வேடிக்கையாக இருக்கின்றதே?

சுந்-வ-ம்:—என்ன இது வேடிக்கையாக இருக்கின்றதே?

வல்ல-வ ம்:—சரி போகட்டும் உனக்கு ஏதாவது சங்கீதங்கள் தெரியுமா?

சுந்-வ-ம்:—சரி போகட்டும் உனக்கு ஏதாவது சங்கீதங்கள் தெரியுமா?

வல்லவராஜன் சொல்வதுபோல சுந்தராங்கதனும் சொல்ல
பிறகு இருவரும் பாடுகிறார்கள்.

### வல்லவன் தரு.

இராகம்-ஸ்ரீரஞ்சனி, தாளம்-ஆதி.

அனுபல்லவி.

ஆவிவேக மா — நௌல கோரி கோரி
அட்டத்துரோவ த்ரோகி — தினப்ரொவவே (பு)

பல்லவி.

புவனீதா சுடனீ — பேராசசே
பொங்கு லாடிதினி — புதமனே கரா (பு)

சரணம்.

சால சௌக்யமு — கஷ்டமு நினு
ஜாலி செந்திதினே — சரி வாரிலோ
பால முஞ்சினே — நிடமுஞ்சினவோ
பதமுலே கதி — தியாக ராஜனுத (பு)

[இதைப்போலவே சுந்தராங்கதனும் பாடுகிறான்.]

வல்ல-வ-ம்:—பேஷ்! நன்ருகவே பாடுகிருன், குரலும் மிகுந்த வளப்பமான தொனியாகவே யிருக்கின்றது. ஆயினும், இவ்வேடிக்கையை நமது புத்திரிக்கும் மந்திரி புத்திரிக்கும் காட்டவேண்டும். அடே சேவக் நீ அதிதுரிதத்தில் சென்று எனது குமாரத்தியையும் நமது மந்திரி குமாரத்தியையும் அழைத்துவா இப்புதுமைகளைக் காட்டலாம்.

சேவ-வ-ம்:—அப்படியே மஹாபாக்கியம் பிரபு.

சேவகன் போகிருன் சாந்தியும் காந்தியும் வந்து அரசனைப் பணிகின்றனர்.

இருவர்-வ-ம்:—தந்தையே நமஸ்கரிக்கின்ருேம். எங்கே அந்த வேடிக்கைக்காரன்?

வல்ல-வ-ம்:—இதோ இவன்தானம்மா!

சுங்-வ-ம்:—இதோ இவன்தானம்மா!

சாந்தி-வ-ம்:—ஐயா! தாங்கள் யார்? உங்கள் இருப்பிடம் எங்கே?

சுங்-வ-ம்:—ஐயா! தாங்கள் யார்? உங்கள் இருப்பிடம் எங்கே?

சாந்தி-வ-ம்:—ஐயோ! இதென்ன இவன் இப்படி கூடவே பேசுகிரானே?

சுங்-வ-ம்:—ஐயோ! இதென்ன இவன் இப்படி கூடவே பேசுகிரானே?

சாந்தி-வ-ம்:—இவன் ஓர்வித மனிதன்போல் தோற்றுகின்றதே?

சுங்-வ-ம்:—இவர் ஓர்வித மனிதன்போல் தோற்றுகின்றதே?

சாந்தி-வ-ம்:—ஐயா! தாங்கள் பாடுவீரா?

சுங்-வ-ம்:—ஐயா! தாங்கள் பாடுவீரா?

சாந்தி-வ-ம்:—ஏதோ பாடுங்கள் பார்க்கலாம்?

சுந்த-வ-ம்:—ஏதோ பாடுங்கள் பார்க்கலாம்?

சாந்தியும் சுந்தராங்கதனும் பாடுகிருர்கள்.

**சாந்தி தரு.**

பாரெங்கும் புகழ்பெரும் சரபம் என்றமெட்டு.

சமராபுரி — சரவணபவனே
சத்ரு சங்கார — ஷண்முகனே

இமைய பார்வதி யருள்மகனே
இடரே தீர்த்தருள்புரி குகனே—இ (ச)

[இதைப்போலவே சுந்தராங்கதன் பாடுகிறுன்.]

சாந்தி மேற்படி மெட்டு தரு.

தேனுபிஷேக விலாசா
தெய்வக் குஞ்சரிமகிழ் நேசா
வானோர் போற்றிடும்முரு கேசா
வந்தாதரித்தாள் விசு வாசா—வ (ச)

[இதைப்போலவே சுந்தராங்கதன் பாடுகிறுன்.]

சாந்தி மேற்படி மெட்டு தரு.

பார்க்காவடி புகழா னந்தம்
பார்த்தால் வெகுபிரம்மா னந்தம்
சீர்த்தாங்கிடும் ஜெகம்புகழ் கந்தம்
செப்பும் தியாகராஜனின் சந்தம்—செ (ச)

[இதைப்போலவே சுந்தராங்கதன் பாடுகிறுன்.]

சாந்தி-வ-ம்:—என்னடி இது இவன் இவ்வளவு சொகுசாகப் பாடுகிறுனே ?

சுங்-வ-ம்:—என்னடி இது இவன் இவ்வளவு சொகுசாக பாடுகிறுனே?

சாந்தி—வ-ம்:—ஆமாம், தெம்மாங்கு ஏதாவது பாடுவாயா ?

சுங்-வ-ம்:—ஆமாம் தெம்மாங்கு ஏதாவது பாடுவாயா ?

சாந்தி-வ-ம்:—ஆனல் பாடு பார்க்கலாம்.

சுங்-வ-ம்:—ஆனல் பாடு பார்க்கலாம்.

சாந்தி தெம்மாங்கு.

பாக்கு வெத்திலையாம் மச்சாங் கேக்க வெக்கமோடா
கேக்க வெக்கமோடா மச்சாங் கேக்க வெக்கமோடா (பா)

கேக்க வெக்கமோடா மச்சாங் கேக்க வெக்கமோடா
பாக்கு நல்ல பாக்கு கலி பாக்கு
வெத்திலை பாக்கு கொட்டை

பாக்கு வெத்திலையாம் மச்சாங் கேக்க வெக்கமோடா
கேக்க வெக்கமோடா மச்சாங் கேட்டு வெச்சுகோடா (பா)

சுந்தராங்கதனும் இதைபோலவே பாடுகிறுன்.

சாந்தி-வ-ம்:—அடி! இவன் தெம்மாங்கு கூட பாடுகிருனே?

சுந்-வ-ம்:—அடி! இவன் தெம்மாங்கு கூட பாடுகிருனே?

வல்ல-வ-ம்:—குழந்தாய்! இவன் பாவம் பைத்தியக்காரனுக இருக்கிற படியால் இவனுக்கு உலக விஷயம் ஒன்றும் தெரியாது. இவனை உங்களுக்குச் சுவடித்தூக்கியாக வைத்துக்கொள்ளுங்கள்.

சுந்-வ-ம்:—குழந்தாய்! இவன் பாவம் பைத்தியக்காரனுக இருக்கிறபடியால் இவனுக்கு உலக விஷயம் ஒன்றும் தெரியாது. இவனை உங்களுக்குச் சுவடித்தூக்கியாக வைத்துக்கொள்ளுங்கள்.

சாந்தி-வ-ம்:—நல்லது அப்படியே செய்கிறோம் தந்தையே!

சுந்-வ-ம்:—நல்லது அப்படியே செய்கிறோம் தந்தையே!

வல்ல-வ-ம்:—அம்மணி! இன்னொன்று மறந்தேன். அதாவது, உங்களுக்கு பருவகால மேற்பட்டு விட்டபடியால் இன்று முதல் நீங்கள் வித்தியாசாலைக்கு போகவேண்டாம் நீங்கள் சென்று உபாத்தியாயருக்கு குருகாணிக்கையை மாத்திரம் கொண்டுபோய் கொடுத்து விட்டு வந்து விடுங்கள்.

சாந்-வ-ம்:—நல்லது தந்தையே! ஆனுல் இந்த ஆளுக்கு இன்று முதல் தூக்குத்தூக்கி என்று பெயரிட்டழைக்கின்றோம் பிதா!

வல்-வ-ம்:—ஆமாம்! இவன் சுவடித்தூக்கி யல்லவா? அதற்கு அடுத்த தொடராக தூக்குத்தூக்கி யென்ற பெயரிருக்கட்டும். சீக்கிரம் சென்று வாருங்கள்.

சாந்தி-வ-ம்:—ஐயா! இன்று முதல் உனக்குத் தூக்குத்தூக்கி யென்று பெயரிட்டு இருக்கிறோம் உனக்கு சம்மதிதானே?

சுந்-வ-ம்:—ஐயா! இன்று முதல் உனச்குத் தூக்குத்தூக்கி யென்று பெயரிட்டு இருக்கிறோம். உனக்கு சம்மதி தானே?

சாந்தி-வ-ம்:—ஆனுல் வா போகலாம்.

சுந்-வ-ம்:—ஆனுல் வா போகலாம்.

[எல்லோரும் போகிறார்கள்.]

சீன் :—14] [இடம்:—பள்ளிக்கூடம்.

**உபாத்தியாயர் பள்ளியில் பாலர்களுக்கு கல்வி கற்பித்துக் கோண்டிருக்கின்றார்.**

உபாத்-வ-ம்:—அடே! சட்டம்பள்ளை! நமது பாடசாலையில் வாசித்து வாராநின்ற பாலர்கள் அதிஊக்கமுடன் வாசிக்கின்றனரா என கவனித்துக்கொள்.

சட்-வ-ம்:—நல்லது ஐயா! அப்படியே கவனித்துக்கொள்ளுகிறேன். அடே! பிள்ளைகளே, சரியாக வாசியுங்கள்.

இதற்குள் ராஜ புத்திரியும் மந்திரி புத்திரியும் சுந்தராகங்கதனும் வருகிறார்கள்.

சாந்தி தரு.

குமரனையே பாடிகொண்ட பாடுவோமே என்ற மெட்டு.

பல்லவி.

துதி செய்துமே உனை தோத்தரித்தேன் குருவே (து)

அனுபல்லவி.

நிதியுடன் கல்விதனை நேர்மையா யெங்களுக்கு
பதியவைத்த குருவே பாதமதையே பணிந்து (து)

ஆறுதப்பு நூறு பிழை அடியார் யாம் செய்தபோதும்
சீருடன் மனம் பொருத்து சிறப்புடனாதரிக்க (து)

பருவகாலத்தால் தந்தை படித்தது போது மென்றார்
குருதக்ஷணை கொணர்ந்தோம் குணமுடன் பெற்றுக்கொள்வீர்

அழகாருளைக் கொண்டு அவனியில் தமிழைகண்டு
பழக்கமாய் தியாகராஜன் பாடவிசைத்ததுண்டு (து)

சாந்தி-வ-ம்:—ஐயனே! அடியார்களாகிய யாங்கள் தங்களின் பாதாவிந்தத்தைப் பணிகின்றோம். அதாவது, யாங்கள் பருவகாலமடைந்து விட்டபடியால் எனது தந்தையானவர் இனிமீது யாங்கள் படிக்கக்கூடாது என்றும், தங்களுக்கு குரு தக்ஷிணை தந்துவிட்டு வரும்படியாகவும் தெரிவித்தனுப்பினார். ஆதலால், இதை தாங்கள் மனக்குறையின்றி பெற்றுக்கொண்டு இவ்வடியார்களை ஆசீர் வதிக்க வேண்டும்.

உபாத்தி-வ-ம்—சந்தோஷம் தீர்க்க சுபமங்கலீபவா! அடே! சட்டாம்பிள்ளை! இதை கொண்டுபோய் உள்ளே வைத்துக்கொள், நான் அனுஷ்டானம் முடித்து வருகின்றேன்.

சந்தி-வ-ஐயனே! எங்களுக்கு விடை தாருங்கள்.

வாத்தி-த-ம்:—நல்லது! சென்று வாருங்கள், உங்களின் முயற்சி முன்னுக்கு வந்து விட்டது, என் கருத்துதான் ஈடேராமல் விழலுக்கிறைத்த நீர்போலாகிவிட்டது, என்னசெய்யலாம், எட்டாத தேனுக்கு ஆசைப்பட்டு முட்டிகொண்டிக் கொண்டாலும் கிட்டுமோ?

என்ன செய்யலாம்? என்மீது நீங்கள் இவ்வளவு தயவுவைத்து விட்டீர்கள்! சரி போங்கள்.

உபாத்தியாயர் போகிறார் சட்டாம் பிள்ளை வருகிறார்.

சட்-வ-ம்:—ஏ! பெண்களே! இத்த காணிக்கைக்காத நான் உங்களுக்கு இதுநாள் வரையில் கஷ்டப்பட்டு கல்விகளை கற்பித்தோமென நினைத்துக்கொண்டீரா? நான் மனதில் நினைத்திருந்த மார்க்கத்தை கொஞ்சமேனும் நிறை வேற்றாமல் போகிறீரே?

சாந்தி-வ-ம்:—அது என்ன மார்க்கமையா?

சட்-வ-ம்:—என்ன மார்க்கமா! என்னை கைவிட்டு போகின்றீரே அந்த மார்க்கந்தான்

சாந்தி-வ-ம்:—தாங்கள் சொல்வது ஒன்றும் விபரப்பட வில்லையே.

சட்-வ-ம்:—ஆம்! விபரப்படுமோ? விபரப்படாது. ஏனென்றால் பருவமடைந்து விட்டீரே இப்போது விபரப்படாது, யானுவது விபரமாக தெரிவிக்கின்றேன் கேட்டு வாருங்கள், அதாவது யான் எதற்காக உங்களுக்கு இவ்வளவு கஷ்டப்பட்டேனென்றால், பருவ கால மடைந்த பிறகு நமக்கு உபயோகப் படுத்திக் கொள்ளலாமென்றுதான்.

சாந்தி-வ-ம்:—ஐயா! தந்தை, தாய், குரு, தெய்வம், இவர்களுள் கல்வி கற்பிக்கும் குருவல்லவோ நீர்? அப்படியிருக்க, தங்களின் குமாரத்திகளுக்கு சமானமாகிய எங்கள்மீது காதல் கொள்வது தங்களைப்போன்ற வித்வாம்சர்களுக்குத்தகுமா? இனியேனும் அவ்வித கொடிய எண்ணத்தை விடுத்து இக்கோதையர் களுக்கு விடையளிப்பீரென கேட்டுக்கொள்ளுகிறோம்.

சட்-வ-ம்:—பேஷ்! பேஷ்! நன்றாக இருக்கின்றது. இந்த சட்டத்தை உங்களுக்கு யார் போதித்தார்கள்? உங்களுக்கு பட்ட கஷ்டங்களை வேறு யாருக்கேனும் பட்டிருப்பேனாயின் எனதெண்ணத்தை ஏதொரு தடையின்றி பூர்த்தி செய்வார்களன்றோ? நீங்கள் காணிக்கை கொண்டுவந்து விட்டீர்களே? என் எண்ணத்தை பூர்த்தி செய்யாமல் இந்தகாணிக்கை மாத்திரம் எதற்கு? வேண்டாம் எடுத்துச் சொல்லுங்கள்.

சட்டாம் பிள்ளை தரு.

ராமபஜன ஹோதியா என்ற மெட்டு.

பல்லவி.

என்னை மோசம் செய்தீர்களே ஏந்திழைகளே (ஏ)

அநுபல்லவி.

இன்னுள் வரையுங்களுக்கு இவ்வளவு கஷ்டபட்டு
ஏதும் வழியின்றி போச்சே ஏங்கிட வாச்சே (எ)

கலவிக்குதவ வல்லோ கல்விகளை கற்பித்தேன்
காணிக்கைகொண்டு வந்தீரே கன்னியர்களே (எ)

சட்-வ-ம்:—கண்மணிகளே! நீங்கள்போய் விட்டபோதும் இனி என் பிராணன் மாத்திரம் இவ்வுலகில் வாழுமா? ஒருக்காலும் வாழாது. சத்தியமாக இதோ பாருங்கள் என் ஆவியை போக்கிக் கொள்ளுகிறேன்.

தூக்குப் போட்டுக்கொள்ள எத்தனிக்கின்ருன்.

சாந்தி-வ-ம்:—ஐயா! வேண்டாம் பொருங்கள். அவசரப்பட வேண்டாம். யோசிக்கவேண்டி யிருக்கின்றது (காந்தியைப்பார்த்து) தங்கா! இவர் நமக்காக சிறுவயது முதல் எவ்வளவு கஷ்டப்பட் டிருக்கின்ருர்? இவரால்தான் நாமும் முன்னேற்றமடைந் தோம், பாவம் இவர் இப்போது நம்மால் உயிரை போக்கிக்கொள் வதாக துணிந்திருக்கின்ருர்! ஆதலால், இந்த பாவத்திற்கு நாம் ஏன் ஆளாகவேண்டும்-

காந்தி-வ-ம்:—ஆமாம் அக்கா! பாவம் இவர் நம்பொருட்டு உயிரை விட்டுவிட்டாலும் விடுவார், சாவதற்கு துணிந்து நம்மீது ஏதேனும் பழிசுமத்திவிட்டாலும் சுமத்திவிடுவார் போனுற்போகின் றது ஒத்துக்கொள்ளலாமே, இது யாருக்கு தெரியப்போகிறது?

சாந்தி-வ-ம்:—ஆம் தங்கா! யாருக்கும்தான் தெரியாது. ஆனல் தூக்குத்தூக்கி யிருக்கின்ருனே? ஒருவேளை இதை நமது தந்தை யிடம் தெரிவித்துவிட்டால் என்ன செய்வது?

காந்தி-வ-ம்:—என்ன அக்கா! அவனுக்கு உலக விஷயமே ஒன் றும் தெரியாது. நாம் ஏதாவது பேசினல் கூடவே பேசுவான், அவ னுக்கு என்ன தெரியும்?

சாந்தி-வ-ம்:—ஆம்! அப்படிதான் செய்யலாம், ஆனல் இவ் விடத்தில் கூடாது. தவிறவும், நேரமாகிவிட்டது நாளைக்கு பார்த் துக்கொள்ளலாம்.

காந்தி-வ-ம்:—ஐயனே! ஒரு விஷயம்! இங்கு வேண்டாம். நாளையதினம் இரவு 10-நாழிகைக்குமேல் நம் நகருக்கு அடுத்த காளிகோவிலண்டை வந்துவிடும். பிறகு உமது இஷ்டத்தை பூர்த்தி செய்கிறோம்.

சட்-வ-ம்:—ஆனால் சென்று வாருங்கள். மறந்துவிடாதீர்கள்.

காந்தி-வ-ம்:—ஒன்றும் மறக்கமாட்டோமையா.

[போகிறார்கள்]

சீன் :—15.] [இடம் :—ரோட்.

சுந்-வ-ம்:—(தனி) ஆஹா! நாமிவர்களுக்கு சுவடித்தூக்கிக் கொண்டு கூடவேபோகவும், வரவுமிருப்பதா லல்லவோ, தூக்குத் தூக்கியென்று பெயரிட்டார்கள் "காலத்திற்கேற்ற கோலம், கோலத்திற்கேற்றார்போல நாமெடுத்துக்கொண்டோம் வேஷம்" அடடா இந்த பெண்களின் நடவடிக்கைகள் "வெட்ட வெளிச்சம் பட்டம் பகல்போல் விளங்கிவிட்டது." ஆஹா! இவர்கள் மகா கெட்டிக்காரிகள். "பிஞ்சியிலேயே பழுத்தவர்கள்" பருவ பக்குவமானதுதான் தாமதம், சட்டாம்பிள்ளையை இரவு 10-நாழிகைக்கு வரச்சொல்லி வாக்கும் கொடுத்துவிட்டார்கள். என்னவென்றால், நமக்கு ஒன்றும் தெரியாதாம், ஆஹா! அவன் சுகிக்க நாம் பார்த்திருப்பதா? எப்படியாகிலும் நாமல்லவோ இவர்களைத் தட்டிக்கொண்டுபோகவேண்டும்? பாவம் சட்டாம்பிள்ளை அதிக ஆடம்பரத்துடன் வருவான், இதற்கு ஒரு மார்க்கம் செய்யலாம், அதாவது இவ்விஷயத்தை இவனது தந்தைக்கு உரைத்து பயமுறுத்தி அவனை வரவொட்டாது நிறுத்தி அவனுக்குப்பதிலாக நாம் சென்று அப்பெண்களை தட்டிக்கொண்டு போகலாம். [சுந்தராங்கதன் போகிறான்.]

சீன் :—16.] [இடம்:—வாத்தியார் வீடு.

உபாத்தியாயர் அமர்ந்துக்கொண்டிருக்கின்றார்,
சுந்தராங்கதன் வருகிறான்.

சுந்-வ-ம்:—ஐயா! நமஸ்காரம்.

வாத்தி-வ-ம்:—தம்பி! நீயார்? எதற்காக இவ்வளவு அவசரத்துடன் இங்கு ஓடிவந்தாய்.

சுந்-வ-ம்:—ஐயனே! வீணாக ஒரு உயிர்போககாலம் நேரிட்டுவிட்டது, அது என் மனது தாளாமல் தங்களிடம் உரைக்கவந்தேன்.

வாத்தி-வ-ம்:—என்ன? உயிர்போகப் போகிறதா? யாருடைய உயிர் போகப்போகிறது? உன்னை என்ன அந்தப் பெண்கள் பைத்தியக்காரனென்று சொன்னார்களே?

சுந்-வ-ம்:—நானா பைத்தியக்காரன்? காரியப் பைத்தியக்காரனல்லவோ நான்! அதாவது சொல்கிறேன் கேளுங்கள். தங்களுக்கு

ராஜகுமாரத்தியும், மந்திரி குமாரத்தியும், காணிக்கை கொண்டுவந்தார்களல்லவோ? அதை வாங்கி வைக்கும்படியாக உமது குமாராராகிய சட்டாம்பிள்ளைக்கு தெரிவித்து நீர் சென்றீரல்லவோ? உடனே உமது குமாராராகிய சட்டாம்பிள்ளை அப்பெண்களை எப்படியோ கைவசப்படுத்திக்கொண்டு, இன்றிரவு 10-நாழிகைக்கு காளி கோவிலண்டை வருவதாகவும், இருவரும் அவ்விடத்தில் ஒருமிப்பதாகவும், வாக்குதத்தம் நடந்து இருக்கின்றது. இச்செய்தியை அரசனுக்கு யாரோ தெரிவித்துவிட்டார்கள்போலிருக்கின்றது. அதற்காக அரசன் இந்த திருடனை எப்படியாகிலும் கண்டுபிடிப்பதே சரியென நிச்சயித்து காவலர்களை ஏவவிட்டிருக்கிறார். அது என் மனது கொஞ்சமும் தாளாமல் தங்களுக்குறைக்கலாமென ஓடிவந்தேன், இனி நீங்கள் இருக்கவேண்டிய உஷாரிலிருங்கள் பிறகு நிந்தனை வேண்டாம்.

வாத்தி-வ-ம்:—என்ன இது? எனக்கிருப்பது ஒரே பிள்ளையாச்சுதே? அவனை பரிகொடுப்பேனா? நீ போ எல்லா காரியமும் நான் பார்த்துக்கொள்கிறேன். [சுந்தராங்கதன் போகிறான்.]

வாத்தி-வ-ம்:—அடே கண்மணி!

சட்-வ-ம்:—ஏனையா ?

வாத்தி-வ-ம்:—அங்கே என்னடா செய்கிறாய்? இப்படிவா சீக்கிரம்.

சட்டாம்பிள்ளை ஆடையாபரண அலங்கரிப்புடன் வருகிறான்.

சட்-வ-ம்:—தந்தையே எதற்காக அழைத்தீர்.

வாத்-வ-ம்:—என்னடா இது? இன்னேரத்தில் எங்கே போவதற்காக ஆடையாபரணங்களை யுடுத்திக்கொண்டாய்? உனக்கு எப்போதும் இரவெல்லாம் வெளியில் சுத்துவதே வேலையாய் விட்டாற்போல் தோற்றுகிறதே? நீ எப்படிதான் பிழைக்கப் போகிறாயோ தெரியவில்லை? எக்கேடாவது கெட்டுபோ எனக்கென்ன போயிற்று, போகட்டும் நீ சென்று அதோ அந்த அறையில் பாரதம் ராமாயணம் எல்லாமிருக்கிறது, சீக்கிரம் எடுத்து கொடுத்துவிட்டு எங்கேயாவதுபோ.

சட்-வ-ம்: —சரி அப்படியே கொண்டுவருகிறேன் பிதா!

சட்டாம்பிள்ளை அரண்மனைக்குள்ளே போகும் சமயம்பார்த்து வாத்தியார் அறையை வெளியில் தாளிட்டுக்கொள்கிறார்.

சட்-வ-ம்:—ஐயையோ! தந்தையே! இதென்ன என்னை உள்ளே அனுப்பி விட்டு வெளியில் தாளிட்டீரே?

வாத்தி-வ-ம்:—அடே கழுதே! இங்கேயே இரு, பிஞ்சிலேயே பழுத்த பேயே! சீ! சீ! பேசாமலிரு.

சட்-வ-ம்:—ஐயையோ! கதவை திறவப்பா திற, அல்லாவிடில் இங்கேயே என் உயிரை விட்டு விடுவேன்.

வாத்தி-வ-ம்:—கழுதே! அப்படியே செத்துப்போ!

துட்-வ-ம்:—அப்பா! வேண்டாம் கதவைத்திற!

வாத்தி-வ-ம்:—நான் திறக்கமாட்டேன், சீ! கழுதே கத்தாதே!

சீன்:—17.] [இடம்:—காளி கோவில்.

ராஜ குமாரத்தியும் மந்திரி குமாரத்தியும் காளிகோவில் அருகில் நின்றிருக்கின்றனர் சுந்தராங்கதன் ஒரு புற மாக மறைந்து பார்த்துக் கொண்டிருக்கின்றான்.

காந்தி-வ-ம்:—அக்கா! என்ன சட்டாம்பிள்ளை இன்னும் வர வில்லையே?

சாந்தி-வ-ம்:—தங்கா! என்ன செய்வது? வருகிறேனென்று சொல்லி மோசம் செய்து விட்டார் போலிருக்கிறது! திரும்பி நமது அரண்மனைக்குப் போகலாமென்றாலோ இந்த நடுஜாமத்தில் பயமா கவுமிருக்கின்றது. அந்தப் பாவியை நம்பி நாம் இப்படியும் மோசம் போவோமா?

இதற்குள் சுந்தராங்கதன் ஒரு புறமாக வருகிறான்.

சுந்-வ.ம:—பேஷ்! பேஷ்! காரியம் நன்றாக இருக்கின்றது? இனி மீது நமது எண்ணம் நிறைவேற தடையொன்று மில்லை. சட்டாம் பிள்ளை கதியும் அதோ கதிதான், இவர் கதியும் இதே கதிதான், ஐயோ பாவம்! மிகவும் பயப்படுகிறார்கள், இந்த சமயத்தில் தான் நாம் இவர்களை ஆதரித்து நமது சைவசமாக செய்துக்கொள்ள வேண்டும்.

சுந்தரர்ங்கதன் தரு.

சாயம் வெளுத்துபோச்சு சட்டாம் பிள்ளை ஓடலாச்சு
மாயமாய் தூக்குத்தூக்கி மறைந்திருந்து சிரிக்கலாச்சு (சா)

காணிக்கைத் தரவுமாச்சு காளிகோவில் வரவு மாச்சு
ஏணிபோல் நிற்கலாச்சு இருவருக்கும் நான் ஜோடியாச்சு (சா)

சுந்தராங்கதன் பெண்களருகில் வந்து.

சுந்தராங்கதன் தெம்மாங்கு.

மானு மருதையிலே குட்டி மருக்கொழுந்து கூடைக்காரி
ஏனோ எனைக்கண்டதும் தலே மேலே முக்காடு போட்டீர்

சுந்-வ-ம்:—ஆஹா! பலே பேஷ்! சிரிக்கிகளே! காரியம் நன்ருயிருக்கிறது? "அந்தத்தம்பி இந்தத்தம்பி அகப்பட்டுக் கொண்டான் துமட்டிக்காய் பத்தன்" என்பது போலும் "நெட்டைப் பனைமரம் நிற்கக்கண்டேன்" என்பதைப் போலவும், "மரப்பொந்தில் ஆந்தை மிரளதிரட்டு விழி விழிக்கக்கண்டேன்" என்பதாகமௌனித்து நிற்கின்றீர்களே? இப்படியும் அகதிபோல் நிற்கலாமா? உங்களுடைய நிலைமை என்ன? தன்மை யென்ன? ஒருவனை நம்பி இப்படி அர்த்த ராத்திரியில் இக்கானகத்திடையே வரக் காரணமென்ன? நல்ல ராஜ வம்சத்திலுதித்து என் உங்களுக்கிந்த விதி!

சுந்தராங்கதன் தரு.

வாங்க வாங்கடி லவண்டிகளா அந்த
வாத்தியார் சட்டாம்பிள்ளை கண்டிங்களா

போங்கோ போங்கடி பெண்டுகளா ஒரு
புருஷனுக்கு ஆசைப்பட்டு நின்றிங்களா அடி

புத்தி கெட்டுத் தானே
புறப்படுவ தேனே
நித்தியமும் தானே
நிலேகுலேந்து மானே அடி

நீலக்கருங் குயிலே நீயும் நானும் போகையிலே
நிலா பிறக் கையிலே
சிதம்பரம் போகையிலே

சிங்காரம் காணுதடி உங்களுக்கு
ஜீவனங் கிருக்குதடி

செல்லு செல்லு திருச்சி நகர் செல்லு
திருவாலூரு செல்லு திருமதுரை செல்லு

சிரிக்க வேண்டாம் பல்லு மை
ஜீனி பட்டா ஜில்லு
ஜில்லு ஜில்லு ஜில்லு (வா)

## வேறு தெம்மாங்கு.

ஏராத மலைதனிலே ராஜா எருது ரெண்டு தத்தளிக்க
பாரா திருக்கலாமா பழனி மலை யாண்டவனே (ஏ)

சுந்-வ-ம்:—இப்போது உங்கள் சங்கதிகளெல்லாம் வெட்ட வெளிச்ச மாகி விட்டதா?

சுந்-வ-ம்:—ஐயா! தூக்குத்தூக்கி! பைத்தியக்காரர் போல் உளரிக்கொண்டிருந்து இப்போது ஊரைக் கெடுத்தீரே? அது போகட்டும் இதற்கென்ன செய்வது அப்பா?

சுந்-வ-ம்:—இனி என்னை அப்பா யென்று சொல்லாதீர் நாதா யென்று சொல்லுங்கள்.

காந்தி-வ-ம்:—போகட்டும், எங்களுக்கென்ன வழி?

சுந்-வ-ம்:—இனி வேறு என்ன இருக்கிறது வழி? நீங்களும் நானும் இப்படியே வெளியூருக்குதான் வழி. ஏனென்றால், உன் தந்தை நீங்கள் அரண்மனையை விட்டு வந்த உடனே, வீடு முழுதிலும் தேடி பார்த்து உங்களைக் காணாமையால் என்னை கூப்பிட்டு உங்களை எங்கிருந்தாலும் கண்டுபிடித்து வெட்டிப்போட்டு வரும் படியாக அனுபினார். ஆதலால், என்னை நீங்கள் விவாகம் செய்வதாயிருந்தால் நான் உங்களைக் காப்பாற்றுகிறேன்.

காந்தி-வ-ம்:—தங்கா! இதற்கெப்படி யோசனை காத்திருந்தவன் பெண்ணை நேற்று வந்தவன் கொண்டுபோக காலம் வந்துவிட்டது, உன் யோசனை எப்படி.

காந்தி-வ-ம்:—அப்படிதான் மணந்துக்கொள்ளலாம்.

சுந்-வ-ம்:—சரிதானே! இப்படி வாருங்கள். (மோதிரத்தை மாற்றிக்கொள்ளுகிறார்கள் விவாகம் நடந்தேருகிறது.)

சுந்-வ-ம்:—கண்மணிகளே! இனி இங்கிருப்போமாகில் நமக்கு ஆபத்துதான், வாருங்கள் வெளிநாட்டிற்குச் சென்றுவிடலாம்.

சாந்தி-வ-ம்:—பிராணபதி! தாங்கள் இன்னாரென முன்னமே தெரிந்திருந்தால் நமது ராஜாங்கமறிய மணம்புரிந்து சுகத்துடனிருக்கலாமல்லவோ?

சுந்-வ-ம்:—அன்னமே! அதற்காகவா வருந்துகின்றாய்.

### சுந்தராங்கதன் தெம்மாங்கு.

அடி மானுருட்டும் கண்ணழகி அடி அடி அடி அடியே
என் மணக்காட்டு பெண்ணழகி
அடி தேனருந்தும் தினையழகி உங்கள்
சேதியெல்லாம் தெரியுமடி
தெரியுமடி தெரியுமடி

### பாட்டு.

அடி—சிமுட்டு குட்டிகளா நீங்கள்
சீமையை விட்டிங்களா அடி
அமட்டுகாரிகளா ஊரில்
அலையப்போரிங்களா

### தெம்மாங்கு.

கையோடு கைகோர்த்து அட டட டட என்
சாமி என்சாமி என்சாமி
காளைமாடு ரெண்டும் சேர்த்து

### பாட்டு.

அடி பையப்பைய நடந்துவாடி
பசப்புக்கார தளுக்கிகளா
பழமதுரையடி பெண்ணே பயப்படாதடி—இங்கு
வலவிருக்குதடி பின்னே வாங்கடி ஓடி (மா)

[மூவரும் போகின்றனர்.]

ராஜகுமாரத்தி மந்திரி குமாரத்தி சுந்தராங்கதன் மூவரும்
ஏகாந்தபுரிக்கு வந்து, ஏகாந்தபுரிக்குத் தலைவனாகிய
சூரசேனனிடம் சுந்தராங்கதன் சேனாதிபதியாக
அமர்ந்து சிலகாலம் சென்றதும் சூரசே
னன் குமாரத்தியாகிய ஜம்பகாவை
மணமுடித்து பிறகு காளிகோ
வில் உற்சவத்திற்கு
அனைவரும் சென்று காளிகாதேவி சன்னிதியின் குளத்தில்
ஸ்நானம் செய்கையில் சுந்தராங்கதனை கருடன் தூக்
கிச்சென்று காளிகோவிலில் விட அங்கே கண
வனுக்காக அனேக நாளாக காளிகாதே
வியை வேண்டியிருந்த ஒருபெண் சுந்
தராங்கதனை மாலை சூட்டுகிறாள்
பிறகு அனைவரும் ஒன்றாகி
சூரசேனன் சபைக்கு சுந்
தராங்கதன் வர சூர
சேனன் சுந்த
ராங்கதனின்
வரலாற்றைக் கேட்கின்றான்.

சூர-வ-ம்:—மருகரே! தாங்களின் அதிவீர பராக்ரமச் செய்கைகளும், தங்களின் முகக்குறிப்பும் காணில், தாங்கள் விஷயத்தில் எனக்கோர்வித சந்தேக மேற்பட்டு இருக்கின்றது. ஆதலால் தங்களின் வரலாற்றை மாத்திரம் எனக்கு விபரமாக உரைப்பீராகவும்?

சுந்-வ-ம்:—அப்படியே தெரிவிக்கின்றேன் பிரபு.

## சுந்தராங்கதன் நொண்டிச்சிந்து.

நான்கு சகோதராருடனே வெகு
நாட்டமுடனே பிறந்து யானிருக்கையில்
ஆண்மையை யறியவென்று என்பிதா
ஆளுக் கையாயிரம்பொன் னதனையேதந்து

வியாபாரம் செய்யவனுப்ப யானும்
விபரமறியாமலே தயங்கிவர
கியாதிமிகும் முனிவரை காட்டில்
கண்டு ஐயாயிரம்பொன் னதனையான் தந்து
ஐந்து வாக்கியத்தைக்கற்றேன் யானே
அதன்விபரத்தை யெடுத்துரைப்பேன்கொண்டு
வந்தால்தான் தந்தையென்றார் கொண்டு
வாராதபோதிலும் தாயார் காப்பாளென்றார்
சீர்கொடுத்தால் தங்கையென்றார் கொலை
செய்திடவும் துணிவாள் மனைவியென்றார்
காப்பானுயிர் தோழனென்றார் இதை
கற்றுவந்ததாலே தந்தை மனம்வெறுத்து
ஊரைவிட்டு துறத்த முனிவர்
உரைத்த வாக்கியம் மூன்றை பரிசோதித்து
நேரே மனைவியின்வீட்டை யடைந்து
நானொரு ஆண்டியைப்போல படுத்திருந்தேன்
விந்தையாய் எந்தன் மனைவி சேட்டை
வைப்புவைத்துக்கொண்டிருக்க கண்ணினாற்கண்டேன்
இந்தசேதியை மனைவி அறிந்து
எடுத்தேன் முத்துமாலையென்று தந்தையிடத்தில்
உரைத்தாள்எனை கொலைசெய்ய அப்போது
உயிர்காத்தான் எந்தன் தோழன் ஊரைவிட்டுயான்
வல்லவன் பட்டணமதில் வந்து
வாய்க்கு வந்தபடியே உளரிக்கொண்டு
சொல்வதைப் போலவேசொல்லி அங்கே
சுவடித்தூக்கிவேலையில் யானேயமர்ந்தேன்
மாதர் இருவரை மணந்தேன் பின்னே
மாக்ஷிமையாய் தங்களிட ஊரையடைந்தேன்
சேதியிதுதானையனே இதை
செப்பிவந்தேன் தியாகராஜன் சரபக்கவியால் (நா)

வரலாற்றை கேட்டறிந்த சூரசேனன் சந்தோஷங்கொண்டு தனது நாடாகிய ஏகாந்த பதியை சுந்தராங்கதனுக்கு மகுடம் சூட்டி வைக்கின்றான்.



சுபம்! சுபம்! சுபம்!

## வாழி விருத்தம்.

பாதி மதியோனும்வாழி பன்னிருகை வேலன்வாழி
கோதிலா வாணிவாழி குவலய மன்னர்வாழி
ஜோதியுர பதிப்புசெய்த ஸ்ரீமான் மதுரை முதலியார்வாழி
ஓதினனிந்த நூலை வி. ஏ. தியாகராஜன் வாழி வாழி.

தூக்குத்தூக்கி டிராமா
முற்றிற்று.

---



---

"அமிர்த குணபோதினி" பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை.

...ிவந்து விட்டது! வெளிவந்து விட்டது!!

K. A. மதுரை முதலியாரவர்கள் பதிப்பித்துள்ள

# 12 டிராமா சரித்திரங்கள்.

பற்பல டிராமா கம்பெனிகளில் நடித்து காட்டிவரும் நூதன டிராமாக்கள் 12-சேர்த்து ஒரே பயிண்டாக செய்து தயாராகயிருக்கிறது வேண்டியவர்கள் உடனே நேரிலும் வி. பி. மூலமாயும் பெற்றுக்கொள்ளலாம்.

1. கோவலன் டிராமா.
2. சாவித்திரி சரித்திரம்.
3. அல்லி அர்ஜுனா.
4. அரிச்சந்திரா.
5. அதிரூப அமராவதி.
6. சக்குபாய் சரித்திரம்.
7. பாரிஜாத புஷ்பஹரணம்.
8. தூக்குத் தூக்கி.
9. பிரகலாதன் சரித்திரம்.
10. ஞானசவுந்தரி.
11. ராமதாஸ் சரித்திரம்.
12. கபீர்தாஸ் சரித்திரம்.

இவ்வரிய டிராமாக்கள் 12-ம் ஒருங்குசேர்த்து அழகிய தாளில் கலிகோபயிண்ட் செய்து தயாராகவிருக்கின்றது தேவையுள்ளவர்கள் உடனே ஆர்டருக்கு எழுதுக. விலை ரூபா 2 0 0.

## இதர டிராமா தினுசுகள்.

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| பகவத்கீதை டிராமா | 0 | 4 | பாதுகா-பட்டாபிஷேகம் | 0 | 4 |
| குலேபகாவலி சரித்திரம் 1-2 பாக | 0 | 6 | பவளக்கொடி 1-2 பாகம் | 0 | 6 |
| சிறுத்தொண்டன் டிராமா | 0 | 6 | தாராசசாங்கம் டிராமா | 0 | 4 |
| துளசிதாசர் டிராமா | 0 | 4 | 5 டிராமா சென சென டிராமா | 0 | 4 |
| டம்பாச்சாரி டிராமா 1-2 பாகம் | 0 | 6 | கிருஷ்ணலீலா அல்லது கோபாலகலா | 0 | 6 |
| நந்தனார் சரித்திரம் | 0 | 2 | வள்ளி திருமணம் சுந்தராம்பாள் வேடன்பிளாக் அமைந்தது | 0 | 4 |
| துரௌபதை வஸ்திராபஹரணம் | 0 | 4 | ருக்மாங்கதன் சரித்திரம் | 0 | 4 |
| மார்கண்டேயர் டிராமா | 0 | 4 | கண்டிராஜா | 0 | 4 |
| வள்ளி திருமணம் சுப்பய்ய பாகவதர் பாடியது | 0 | 4 | | | |

இன்னும் உங்களுக்கு தேவையான டிராமா புத்தகங்களுக்கு கீழ்குறித்துள்ள விலாசத்திற்கு எழுதவும். 1-8-0-க்கு குறைந்த ஆர்டர்களை வி. பி.யில் அனுப்ப முடியாது. தனி டிராமா எதுவேண்டுமானாலும் அதன் கிரயத்திற்கு ஸ்டாம்பு வாங்கி கவரில் அனுப்பினால் உடனே அனுப்பப்படும்.

60- நாளில் உபாத்தியாயரில்லாமல் இங்கிலீஷ் கற்றுக்கொள்ளக் கூடிய ஆங்கில ஆசான் விலை ரூ. 2. ஷை தெலுங்கு விலை ரூ. 2.

---

ஷண்முகானந்த புத்தகசாலை, பார்க் டவுன், சென்னை.